# போலீஸ்காரர்கள் பெற்ற தூக்குத் தண்டனை!

உத்தரப்பிரதேசம், பக்பட் நகரில் 1980 — ஆம் ஆண்டு, போலீஸ்காரர்கள் சிலர் மாயா தியாகி என்ற பெண்ணைப் பட்டப்பகலில் ஊர் அறிய நிர்வாணமாக்கி அவமானப்படுத்தியது மட்டுமின்றி, போலீஸ் ஸ்டேஷனில் அவரைச் சித்திரவதை செய்து, குறைப்பிரசவம் ஏற்படச் செய்தனர். தவிர, அவளது கணவர் மற்றும் இருவரைச் சுட்டுக் கொன்றார்கள். இந்தச் சம்பவம் பற்றிய வழக்கில் இப்போது தீர்ப்புக் கூறப்பட்டு இருக்கிறது. பத்துப் போலீஸ்காரர்கள் மீது குற்றம் நிரூபிக்கப் பட்டு, அதில் ஆறு நபர்களுக்குத் தூக்குத் தண்டனையும், மீதி நான்கு நபர்களுக்கு ஆயுள் தண்டனையும் வழங்கப்பட்டு இருக்கிறது. சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த இந்தத் தீர்ப்பைப் பற்றி இருவரது கருத்து:

**ஜோதி பாலசுந்தரம் (வழக்கறிஞர்):**

"ஒரு பெண் என்ற முறையில் இந்தத் தீர்ப்பை முழுமனதாக வரவேற்கிறேன். ஆனால் ஒரு வழக்கறிஞர் நிலையில் நின்று பார்க்கும் போது, எனக்கு ஒரு மாறுபட்ட கருத்து இருக்கிறது. பல்வேறு நாடுகளில் தூக்குத் தண்டனை ஒழிக்கப்பட்டுவிட்டது. தூக்குத் தண்டனை என்பது காட்டுமிராண்டித்தனமான செயல் என்று கருதப்படுகிறது. நம் நாட்டிலும், 1980—ல் ஒரு வழக்கில் தீர்ப்புக் கூறும் போது, சுப்ரீம் கோர்ட் அரிதிலும், அரிதாகத்தான் தூக்குத் தண்டனை வழங்க வேண்டும் என்று கூறியுள்ளது. இந்த வழக்கில், குற்றவாளிகளான பத்து போலீஸ்காரர்களுக்கும் ஆயுள் தண்டனை வழங்கப்பட்டிருக்க வேண்டும். தான் செய்த தவறை நினைத்து, நினைத்து நான்கு சுவர்களுக்குள் குற்றம் செய்தவன் மனச்சித்திரவதை அனுபவிக்க வேண்டும். செத்துச் செத்து உயிர் வாழ்வது என்று சொல்வார்களே, அந்த நிலையைக் குற்றவாளிகள் அனுபவிக்க ஆயுள் தண்டனைதான் சரி.

பாதிக்கப்பட்ட பெண்ணுக்குக்குற்றவாளிகளிடம் இருந்து வசூலாகும் அபராதத் தொகையில் பாதி கொடுக்கப்பட வேண்டும் என்று கோர்ட் கூறியுள்ளது. என்னைக் கேட்டால் அபராதத் தொகை முழுவதும் அந்தப் பெண்ணுக்குக் கொடுக்கப்பட வேண்டும். அந்தப் பெண்ணின் கணவரைச் சுட்டுக் கொன்றிருக்கிறார்கள். அவளுடைய இழப்பு ஈடுசெய்ய முடியாதது. எதிர்காலம் சூன்யமானது.

போலீஸ்காரர்களின் அதிகார மீறல்கள், அடக்கு முறைகள், பரவலாக எல்லா இடங்களிலும் நடந்து கொண்டுதான் இருக்கின்றன. இந்தச் சம்பவம் நாட்டிலுள்ள மற்ற போலீஸ்காரர்களுக்கு ஒரு நல்ல படிப்பினை



• ஜோதி பாலசுந்தரம்




கல்கி, கோகுலம், மங்கையர் மலர் ஆகிய பத்திரிகைகளின் ஆசிரியர் குழுவினர் இந்நாள் வரை நுங்கம்பாக்கத்தில் பணியாற்றி வந்தனர். தற்போது வசதி கருதி, கிண்டியில் அச்சகக் கட்டடத்துக்கே இடம் மாறியுள்ளனர். இனி மூன்று பத்திரிகைகளுக்கும் நிர்வாகக் காரியாலயம், ஆசிரியர் குழு அலுவலகம், அச்சகம் ஆகிய எல்லாமே ஒரே இடத்தில் இயங்கும். முகவரி:

ரேஸ்கோர்ஸ் சாலை; கிண்டி.
சென்னை — 600 032.

யாக இருக்கும் என்று நாம் கருதினால், அது நம்மை நாமே ஏமாற்றிக் கொள்வதாகும். போலீஸ்காரர்கள் இதனையெல்லாம் திருந்த மாட்டார்கள். பயிற்சியின் போதே அவர்களுக்குக் கடமைகளோடு அதிகார வரம்பு மீறினால் ஏற்படக் கூடிய விபரீதங்களும் அழுத்தம் திருத்தமாக உணர்த்தப்பட வேண்டும்.

---

**வி. ஆர். லட்சுமிநாராயணன் (ஓய்வு பெற்ற காவல் துறைத் தலைவர்):**

---

காக்கிச் சட்டை போட்டு விட்டால், அவனுக்கு என்று தனிச் சட்டங்கள் எதுவும் இல்லை. சாதாரண மனிதனுக்கு எந்தச் சட்டங்கள் பொருந்துகின்றனவோ அவைதாம் போலீஸ்காரனுக்கும். சில சந்தர்ப்பங்களில், சூழ்நிலையின் தன்மையை ஒட்டி, ஒரு மனிதனைக் கைது செய்யவோ அல்லது கூட்டத்தில் கண்ணீர்ப் புகை, தடியடி, துப்பாக்கிச் சூடு செய்யவோ போலீஸ்காரர்களுக்கு அதிகாரம் உண்டு. அந்த அதிகாரங்களும், சட்ட அடிப்படையில்தான் பிரயோகிக்கப்படுகின்றன. சட்டத்தைப் பாதுகாக்கவே காவல்துறையினர் இருக்கிறார்கள். அதை மீறும்போது அவர்களும் சட்டத்தின் முன்பு சாதாரண மனிதர்களாகி விடுகிறார்கள். இந்தத் தீர்ப்பை நான் முழு மனத்துடன் வரவேற்கிறேன். நாட்டிலுள்ள அனைத்துப் போலீஸ்காரர்களும் ஒரு தார்மீகப் பய உணர்ச்சியால் உந்தப்பட்டு, அதிகார வரம்பு மீறாமல் கடமைகளைச் சரிவரச் செய்ய இதுபோன்ற தீர்ப்புகள் நிச்சயம் உதவும்.



• வி. ஆர். லட்சுமிநாராயணன்

பேட்டி: **தில்லப்பா**
படம்: **சுபா**



# வழிகாட்டும் தெருவுக்கு [illegible]!

நாயர் வரதப் பிள்ளைத் தெருவில் ஐந்நூறு குடும்பங்கள்; தவிர அறுபது குடிசைகள் கொண்ட ஒரு குப்பம்; நூற்று ஐம்பது மாடுகள் கொண்ட நான்கு மாட்டுத் தொழுவங்கள்; மேலும் மீர்சாகிப் பேட்டை மார்க்கெட்டும் பக்கத்திலேயே!

இந்தத் தெரு எப்படி இருக்கும்? உங்கள் கற்பனை சரியானதுதான். தெருவெங்கும் பல மாதங்களாக எடுக்கப்படாத குப்பைகள்; இருபுறத்திலும் மாட்டுச் சாணமும், மூத்திரமும் கலந்து ஓடிக் கொண்டிருந்த கால்வாய்கள்; இரவில் எரியாத தெரு விளக்குகள். இதுதான் நாயர் வரதப் பிள்ளைத் தெருவின் நிலை — இரண்டு வருடங்களுக்கு முன்பு.

இப்போது?

வெள்ளையடிக்கப்பட்ட பிளாட்பாரக் கற்கள், அசுத்தத்தின் சுவடே தெரியாத தெருவோரக் கால்வாய்கள், குப்பைத் தொட்டியில் மட்டுமே கொட்டப்பட்டிருக்கும் குப்பைகள், இரவில் இருபதடி இடைவெளியில் எரிந்து கொண்டிருக்கும் டியூப் லைட்டுகள்! மொத்தத்தில், இது பழைய வரதப் பிள்ளைத் தெருதானா?

இந்த மாற்றம் எப்படிச் சாத்தியமாயிற்று? சென்னை மாநகராட்சியும், வடிகால் வாரியமும் திடீர் சுறுசுறுப்புப் பெற்று விட்டனவா? அப்படி ஒரு விபரீதம் நிகழ்ந்து விடவில்லை. கவலைப்பட வேண்டாம்! இந்தத் தெருவில் குடியிருக்கும் சம்பத் சொல்கிறார்:

''1985களில் நான் வேலை எதுவும் கிடைக்காமல், வீட்டில் நேரத்தை வீணாக்கிக் கொண்டிருந்தேன். வீட்டை விட்டு வெளியே வந்தால் தெருவின் நிலை கண்டு மனம் எரிச்சலடையும். 'இது என்ன தெரு? கார்ப்பரேஷன் என்னதான் செய்து கொண்டிருக்கிறது?' என்று கோபம் கோபமாக வரும். பின்பு நான் கொஞ்சம் யோசித்துப் பார்த்தேன். 'இருட்டைப் பழிப்பதை விட ஒரு விளக்கை ஏற்றி வைப்பதுதான் சரியான வழி' என்ற பொன்மொழிக்கேற்பப் பல இளைஞர்களைச் சந்தித்தேன். இந்தத் தெருவில் குடியிருப்போரின் சங்கம் உருவாகியது. எங்களை உற்சாகப்படுத்தி வழி நடத்தினார்கள் பெரியவர்களான நாருதின், ரங்கநாதன் முதலியோர். கார்ப்பரேஷனின் வட்ட அலுவலகத்தை அணுகி நிலைமையை விளக்கினோம்.

''குப்பை லாரி தெருவுக்குள் வர முடியாது; மாட்டு வண்டிகளும் போதிய அளவு இல்லை' என்று பதில் கிடைத்தது. ஆனால், ''குப்பைகளைக் கொண்டு வந்து மெயின் ரோட்டில் போட்டால் லாரிகள் எடுத்துச் செல்லும்'' என்றும் சொன்னார்கள்.

''உடனே செயலில் இறங்கினோம். குப்பைத் தொட்டி, துடைப்பம் ஆகியவற்றை வாங்க வீட்டுக்கு வீடு இரண்டு ரூபாய், ஐந்து ரூபாய் எனப் பணம் வசூலித்தோம். தெரிந்த நண்பர் ஒருவர் வண்டி கொடுத்தார். வீட்டுக்கொருவர் வந்து தெருவைச் சுத்தப்படுத்தி, குப்பைகளை வண்டியிலேற்றி மெயின் ரோடிற்குக் கொண்டு போய்ப் போட்டோம். இந்தப் பணியைத் தொடர்ந்து தினசரி இரவில் செய்துகொண்டிருந்ததால் தெருக் குப்பைகளே இல்லாமல் சுத்தமாகக் காட்சியளித்தது.

''ஆனால் தெருவோரங்களில் ஓடிக்கொண்டிருந்த மாட்டுச் சாணமும், மூத்திரமும் நின்றபாடில்லை. மறுபடி கூடிப் பேசிய போது ஒரு ஐடியா உருவாயிற்று. தெருவோரத்தில் இருந்து பூமிக்கு அடியில் பள்ளம் வெட்டிக் குழாய் போட்டு, அதைப் பாதாளச் சாக்கடையுடன் இணைத்து விட்டால் அந்தக் கால்வாய்த் தண்ணீர் பாதாளச் சாக்கடையுடன் கலந்து விடுமே! இதைச் சம்பந்தப்பட்ட அதிகாரிகளிடம் சொன்ன போது 'நாங்கள் செய்து தர மாட்டோம், நீங்களே வேண்டுமானால் செய்து கொள்ளுங்கள்' என்று கூறி விட்டார்கள். எந்த இன்ஜினியரின் உதவியுமில்லாமல் நாங்களே அந்தப் பணியையும் செய்து முடித்தோம். தெருவோரம் சுத்தமாகியது.

''இன்னும் ஒரு பணி பாக்கியிருந்தது. எரியாத விளக்குகளால் இரவில், இருட்டில் மூழ்கியிருந்தது தெரு. ஒன்பது இடங்களைத் தேர்ந்தெடுத்தோம். மரக்கம்பங்கள் நட்டோம். அருகிலிருந்த வீடுகளிலிருந்து கனெக்ஷன் கொடுத்து டியூப் லைட்டுகளை எரியச் செய்தோம். மின் சப்ளை கொடுத்துள்ள வீடுகளுக்கு மாதம் பத்து ரூபாய் சங்கத்திலிருந்து கொடுக்கிறோம்.''

நாயர் வரதப்பிள்ளை தெரு சங்கத்தினர் யாரும் அரசியலை அலசுவதில்லை. 'அரசியல் ஒற்றுமையைக் குலைக்கும்' என்று கருதுகிறார்கள். ஒரு காலத்தில், 'ஏண்டாப்பா, இந்தத் தெருவில் வீடு கட்டினோம், குடிவந்தோம்' என்று நினைத்தவர்கள், இன்று சந்தோஷத்தில் மிதக்கிறார்கள்!

— கௌசல்யா



* காதைத் திருகினால் காரியம் நடக்குமா?

# சிறந்த பெற்றோர்களாய் விளங்க...

'பக்கத்து வீட்டில் ஒரு குழந்தைக்குப் பிறந்தநாள் பார்ட்டி — அக்கம் பக்கத்துக் குழந்தைகள் அதற்கு அழைக்கப்பட்டுள்ளனர்; ஆனால் உங்கள் குழந்தைக்கு மட்டும் அழைப்பில்லை. உங்கள் குழந்தைக்கு இது குறித்துச் சொல்ல முடியாத வருத்தம். கண்களில் நீர் தளும்ப, துக்கத்தில் பிதுங்கிய சின்ன உதடுகளுடன் அவன் உங்களிடம் வந்து முறையிடுகிறான். என்ன சொல்லி அவனைச் சமாதானப்படுத்துவீர்கள்?'

— இந்தக் கேள்வி சில பெற்றோர்கள் கூடியிருந்த போது கேட்கப்பட்டது.

அதற்குக் கிடைத்த பதில்களில் சில:

"ஐஸ்கிரீம் வாங்கித் தருவதாகச் சொல்லிச் சமாதானப்படுத்துவேன்."

"'அடுத்த தடவை உன்னையும் அழைக்கச் சொல்கிறேன்' என்பேன்."

"'உன் பிறந்தநாளுக்குப் பெரிய பார்ட்டி கொடுக்கலாம். அப்போது அந்தப் பையனைக் கூப்பிட வேண்டாம்! என்ன...?' என்று தேற்றுவேன்."

"நானே அவனைப் பக்கத்து வீட்டுக்கு அழைத்துக் கொண்டு போய் நிலைமையை விளக்கி, அவனையும் பார்ட்டியில் சேர்த்துக் கொள்ளச் சொல்வேன்"

சிறந்த பெற்றோர்கள் இவற்றுள் எந்த அணுகுமுறையைக் கையாள வேண்டும்...?

"இவை யாவையுமே தவறு!" என்கிறார்

**மனோதத்துவ நிபுணரான திருமதி வில்லி நீலங்காவில்:** பெற்றோர் — குழந்தைகள் உறவு முறையை ஆராய்ந்து அத்துறை நிபுணராக விளங்கும் இவர், சரியான அணுகுமுறை எது என்பதையும் கூறுகிறார்:



* வில்லி நீலங்காவில்.

"மேற்சொன்ன எல்லா அணுகுமுறைகளிலும் பெற்றோர்களே தமது குழந்தைகளுக்காக முடிவெடுத்துள்ளனர். அந்த முடிவைக் குழந்தை மீது திணிக்கின்றனர். அப்படிச் செய்யாமல் குழந்தையின் சிந்தனை மற்றும் உணர்ச்சிகளின் திறத்திற்குப் பெற்றோர் இறங்கிவர வேண்டும். 'ஆமாம்! உன்னைக் கூப்பிடாமல் விட்டு விட்டதில் எனக்கும் வருத்தம்தான். சரி! இப்போது என்ன செய்யலாம். நீயே சொல்?' என்று குழந்தையிடம் கேட்டால் குழந்தை தானே சிந்தித்து ஒரு முடிவு எடுக்கும். அனேகமாக 'சாக்லேட் வாங்கிக் கொடு' அல்லது 'கதைப் புத்தகம் படித்துக் காண்பி' என்பது போன்ற எளிமையான தீர்வுகளாக அவை இருக்கும். அதை விட்டுவிட்டுப் பழி வாங்கும் உணர்ச்சியையோ, அல்லது வேறு தவறான மனப்பான்மையையோ ஏன் அந்த இளம் பிஞ்சின் மனத்தில் நாம் ஊன்ற வேண்டும்?"

"குழந்தை பார்ட்டிக்குத்தான் போக வேண்டும் என்று அடம் பிடித்தால் என்ன செய்வது?" என்று திருமதி வில்லியிடம் கேட்டோம்.

"அப்போதும் கோபப்படாமல், பொறுமையாக அது சாத்தியமில்லை என்பதை மட்டும் விளக்குங்கள். 'நீயே சொல், இப்போது என்ன செய்யலாம்?' என்று முடிவெடுக்கும் பொறுப்பைக் குழந்தையிடம் விட்டுவிடுங்கள். நிச்சயமாக ஒரு சரியான முடிவைக் குழந்தை எடுக்கும்" என்றார் அவர்.

தொடர்ந்து திருமதி வில்லியிடம் குழந்தை வளர்ப்புப் பற்றி நிகழ்ந்த உரையாடல்:

கேள்வி: சின்ன குழந்தைக்குச் சுயமாகச் சிந்தித்து முடிவெடுக்கும் திறன் உண்டா?

பதில்: ஆறு வயது முதல் குழந்தைகளுக்கு முடிவெடுக்கும் திறமை வந்து விடும். அதற்கு முன் எடுக்கப்படும் முடிவுகள் உணர்ச்சிகளின் தூண்டுதலால் எடுக்கப்படுபவை. அறிவுபூர்வமான முடிவுகளாய் இராது. பெற்றோர்கள் குழந்தைகளாக மாறி அந்த உணர்ச்சிகளின் உந்துதலைப் புரிந்து கொள்ள வேண்டும். அதே போல் குழந்தைகளும் பெரியவர்களாக மாற வேண்டும்!

கேள்வி: பெற்றோர்கள் மாறுவது சரி;

குழந்தைகள் எப்படிப் பெரியவர்களாக 'மாற' முடியும்?

பதில்: நாம்தான் அவர்களைப் பெரியவர்கள் போல் நடத்த வேண்டும். 'உனக்கு ஒண்ணும் தெரியாது. அம்மா சொன்னால் கேட்கணும்!' என்றோ 'பெரியவர்களை எதிர்த்துப் பேசக் கூடாது' என்றோ அவர்களை நாம் அடக்கிக் கொண்டேயிருக்கிறோம். அப்படிச் செய்யாமல், அவர்களைச் சமமாகப் பாவித்து, தங்களுக்குத் தாங்களே முடிவெடுத்துக் கொள்ள, தக்க சந்தர்ப்பச் சூழ்நிலைகளை மட்டும் உருவாக்கித் தர வேண்டும். அவர்களிடம் நிறையப் பேசுவதோடு நிறையக் கேள்விகள் கேட்பதன் மூலம் இதைச் செய்யலாம்.

கேள்வி: சில குழந்தைகள் ரொம்பப் பிடிவாதம் பிடிக்கின்றனர்... என்ன செய்தாலும் வழிக்குக் கொண்டுவர முடிவதில்லை.

பதில்: எந்தக் குழந்தையும் பிறக்கும் போது அடிபணியாத சுபாவத்துடன் பிறப்பதில்லை. பிறவி முதலே தாங்கள் 'அங்கீகரிக்கப்பட' வேண்டும்; தாங்கள் தாங்களாக ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும் என்ற கவலை, ஏக்கம் குழந்தைகளுக்கு இருக்கும். வளர வளர அந்தக் குழந்தை நடந்து கொள்ளும் விதத்துக்கும் அது அனுபவிக்கும் உணர்ச்சிகளுக்கும் இந்த ஏக்கத்தின் அடிப்படையில் வலுவான காரணங்கள் இருக்கும். காரணங்களுக்குப் பெற்றோர்கள்தான் பொறுப்பு. பிடிவாத குணத்தைப் பற்றிச் சொன்னீர்கள் — ஒரு நான்கு வயதுச் சிறுமி பள்ளியில் ஆசிரியை கேள்வி கேட்டால் வாயைத் திறந்து பதில் சொல்லவே மாட்டாள். ஆனால் சக மாணவர்களைப் பற்றிச் சதா டீச்சரிடம் புகார் செய்வாள். அவளது ஆசிரியை அவள் அம்மாவைக் கூப்பிட்டனுப்பி இதை ஒரு பெரிய புகாராகச் சொல்ல, அம்மா, 'நீ ரொம்பப் பிடிவாதக்காரி, பொல்லாத பெண்; உன்னைக் கண்டால் எனக்கு அவமானமாக இருக்கிறது!' என்று கடிந்து கொள்ள, குழந்தையின் பிடிவாதம் அதிகமாயிற்றே ஒழியக் குறையவில்லை. அந்தச் சிறுமியை என்னிடம் அழைத்து வந்த போது நான் கேட்டேன். 'குழந்தை! நீ பிடிவாதக்காரியா?'

'ஆமாம்!'

'ஏன்?'

'எங்கம்மாதான் சொன்னாங்க!'

'உன் வகுப்புக் குழந்தைகளைப் பற்றி டீச்சரிடம் புகார் செய்கிறாயா?'

'ஆமாம்!'

'ஏன்?'

'எங்க மிஸ் என்னைப் பத்தி எங்கம்மாவிடம் புகார் செய்யறாங்க. அதனாலதான்...'

—இந்தச் சம்பவம் குழந்தைகளிடம் இல்லாத குணங்களை நாம் எப்படி அவர்கள் மீது திணிக்கிறோம் என்பதைக் காட்டுகிறது. முதல் முறை அக் குழந்தை வகுப்பில் பதில் சொல்லாமல் இருந்ததற்கு ஒரு நியாயமான காரணம் இருந்திருக்கும். அந்தக் காரணத்தை அறிய முயற்சி செய்யாமல் உடனே, 'வாயே திறக்கவில்லை! பிடிவாதக்காரி!' என்று குழந்தையைத் திட்டுவது என்ன நியாயம்?

கேள்வி: சில குழந்தைகள் தங்கமான குணத்துடன் இருக்கும். தம்பியோ தங்கையோ பிறந்து விட்டால் குணம் அடியோடு மாறி விடுகிறதே!

பதில்: இது இயல்பான மாற்றம்தான். இதற்கும் நாம்தான் காரணம். தாய், தன் நேரத்தையும் உழைப்பையும் இரண்டாவது (கைக்) குழந்தைக்கே அதிகமாகச் செலவிடுகிறாள். அவள் வேலையாக இருக்கும் போது மூத்த குழந்தை ஏதாவது கேட்டால் 'வேலையை முடித்துவிட்டுத் தருகிறேன்' என்கிறாள். அதே சமயத்தில் கைக் குழந்தை அழுதால் கை வேலையைப் போட்டுவிட்டு ஓடுகிறாள். அப்பாவும் அப்படித்தான் 'ஜூனியர்' என்ன செய்தான் இன்னிக்கு' என்று கைக் குழந்தையை விசாரித்தபடிதான் வீடு திரும்புகிறார். 'நாம் வேண்டாதவராகிவிட்டோம்' என்கிற உணர்வு முதல் குழந்தைக்குத் தோன்ற ஆரம்பிக்கிறது. அம்மாவின் கவனத்தைக் கவர்வதற்காகப் பிடிவாதம் பிடிக்கிறது; அப்பாவைத் தன் பக்கம் இழுக்க விஷமம் செய்கிறது. அவர் அடித்தால் — 'அப்பாடி அப்படியாவது அந்த ஸ்பரிசம் கிடைத்ததே என்று உள்ளூர சந்தோஷப்பட்டுக் கொண்டே வலி தாளாமல் அழுகிறது!' சில குடும்பங்களில் நிலைமை தலைகீழாக இருக்கும். முதல் குழந்தையிடம் பெற்றோருக்கு 'சென்டிமென்டல்' ஆக ஒரு பற்றுதல் இருக்கும். அப்போது இரண்டாவது குழந்தை, கவனத்தைக் கவர 'நெகடிவ்' முறைகளைக் கையாளும்!

கேள்வி: இரண்டு குழந்தைகளிடமும் பெற்றோருக்குச் சமமான அன்பு உண்டு என்பதை எப்படிப் புரிய வைப்பது?

பதில்: அழகாகப் பேசியும் சரியாக நடந்து கொண்டும். 'நீயும் குட்டிப் பாப்பாவாக இருந்தாய். இப்படித்தான் தொட்டிலில் கிடந்தாய், என் மடியில் வளர்ந்தாய். அப்பா உன்னைத் தூக்கிக் கொண்டார், பாட்டி உன்னைக் குளிப்பாட்டினார் என்று விளக்கலாம். தம்பி உன்னைப் போலவே இருக்கான் என்று சொன்னால் அண்ணாவுக்குக்



கொஞ்சம் பெருமிதமாக இருக்கும். சற்று வளர்ந்த பிறகு துளியும் பாரபட்சமின்றி இரு குழந்தைகளுக்கும் பொருளையும் நேரத்தையும் சமமாகச் செலவிட வேண்டும். இரு குழந்தைகளையுமே அன்புடன் ஏற்றுக் கொண்டுள்ளதை மீண்டும் மீண்டும் சொல்லாலும் செயலாலும் வெளிப்படுத்த வேண்டும்.

கேள்வி: குழந்தைகளை அடித்து வளர்க்கலாமா?

பதில்: அடிக்கவே கூடாது என்று நான் சொல்ல மாட்டேன். ஆனால் தகுந்த காரணத்துடன்தான் அடிக்கலாம், அதுவும் பத்து வயது வரைதான். அதற்குப் பிறகு அடித்தால் குழந்தைகளின் சுய கௌரவம் சிலுப்பிக் கொண்டு எழும். திருந்துவதற்குப் பதில் எதிர்மாறான விளைவுகள் ஏற்படும். பத்து வயதுக்குட்பட்ட குழந்தைகளை அடிக்கும் போது கூட நமது ஆத்திரத்திற்கு வடிகால் தேடிக் கண்மூடித்தனமாக அடிக்கக் கூடாது. 'நீ செய்தது மிகப் பெரிய தவறு' இதற்குத் தண்டனை கொடுத்தாக வேண்டும். எங்களுக்கு உன் மேல் எவ்வளவு பிரியம்! உனக்கு இப்படி தண்டனை கொடுக்கும் விதமாக நடந்து கொண்டு விட்டாயே!' என்று உண்மையான வருத்தத்துடன் பேச வேண்டும்.

கேள்வி: பல முறை சொன்ன பிறகும் அதே தவறைக் குழந்தைகள் மீண்டும் செய்தால்...?

பதில்: நாம் தவறை எப்படிச் சுட்டிக் காட்டுகிறோம் என்பதைப் பொறுத்துத்தான் குழந்தையின் நடத்தையும் அமையும். 'செய்யாதே! கூடாது! தவறு! ஆகாது!' போன்ற நெகடிவ் சொற்களை அதட்டும் தொனியில் மீண்டும் மீண்டும் சொன்னால் விளைவுகள் நிச்சயம் எதிர்மறையாகத்தான் இருக்கும். போகப் போகப் பெற்றோர்களின் பொறுமையைச் சோதிக்கவும் கோபத்தைத் தூண்டி வேடிக்கை பார்க்கவும் அதே தவறுகளைச் செய்யத் தோன்றும். உதாரணமாக ஒரு சம்பவம்:

ஒரு டீன் ஏஜ் பெண். தினமும் தன் சிநேகிதியுடன் மணிக்கணக்கில் போன் பேசுவாள். அவள் தாயும் தினமும் அவளைக் கடிந்து கொள்வாள். போன் பேசிக் கொண்டிருக்கும்போதே குறுக்கிட்டுப் பலமுறை 'போதும்' 'வேண்டாம்' என்பாள். ஒருநாள் அப்பெண் வழக்கம் போல் போன் அரட்டைக்கு உட்கார்ந்த போது அவள் அம்மா அதைக் கண்டு கொள்ளவேயில்லை. அன்று வழக்கத்தைவிட மிக நீண்ட உரையாடலை நிகழ்த்திவிட்டு இறுதியில் மகள் அம்மாவைக் கேட்டாள்: ''என்மா உனக்கு இன்னிக்குக் கோபமே வரலையா?'' என்று. ''நான் கோபப்படுவதில் என்ன அர்த்தம் இருக்கிறது. அது வீண்தானே!'' என்று உணர்ச்சிவசப்படாமல் அம்மா பதில் சொன்னது மகளைச் சிந்திக்கச் செய்தது. அதற்குப் பிறகு போன் செய்வது அடியோடு நின்றுவிடவில்லை, ஆனால் உரையாடலின் நேரம் வெகுவாகக் குறைந்து போயிற்று!

அதேபோல் டீ. வி. பார்க்காதே, வேண்டாம், போதும் என்று சொல்வதைக் காட்டிலும் டீ. வி. முன் அமரும் குழந்தையிடம் எவ்வளவு நேரம் டீ. வி. பார்க்கப் போகிறாய்? அதற்குப் பிறகு பாடங்களைப் படிக்க நேரம் போதுமா? என்று கேளுங்கள். குழந்தை குறிப்பிடும் நேரம் வந்ததும் அதை அவனுக்கு நினைவுபடுத்துங்கள். சிறிது நேரம் டீ. வி. யை நீங்களும் தியாகம் செய்துவிட்டு அவனுடன் சேர்ந்து படிக்கச் செல்லுங்கள். வீட்டில் எல்லோரும் வைத்த கண் வாங்காமல் டீ. வி. யைப் பார்த்துக் கொண்டிருக்கும்போது குழந்தைக்குத் தனியே சென்று படிப்பில் மூழ்கக் கஷ்டமாகத்தான் இருக்கும்.

கே: எல்லாப் பெற்றோர்களும் தங்கள் குழந்தைகள் வகுப்பில் முதலாவதாகத் திகழ வேண்டும், மிக நன்றாகப் படிக்க வேண்டும் என்று நினைக்கிறார்களே — இது சரியானதா?

ப: எல்லாக் குழந்தைகளுக்கும் அறிவு வளர்ச்சி ஒத்தாற்போல் இருக்காது. ஆனால் ஒவ்வொரு குழந்தைக்கும் ஒரு திறமை நிச்சயமாக இருக்கும். என் குழந்தை வகுப்பில் முதலில் வர வேண்டும் என்று இரவு பகலாக அவனைக் கஷ்டப்படுத்திப் படிக்க வைப்பதைக் காட்டிலும் அவனுக்கு இருக்கும் இயல்பான திறமையைக் கண்டறிந்து ஊக்குவிப்பதுதான் புத்திசாலித்தனம். சில பாடங்களைப் புரிந்து கொள்ள உங்கள் குழந்தை கஷ்டப்படுவதாகத் தெரிந்தால் அதற்கு மட்டும் உதவுங்கள். எப்போது பார்த்தாலும், 'படி படி' என்ற பல்லவியைப் பாடுவதால் பயனில்லை.

கே: 'முதல் ராங்க் வந்தால் சைக்கிள் வாங்கித் தருவேன்' என்பன போன்ற வெகுமதித் திட்டங்களைக் கையாள்வது சரியா?

ப: வெகுமதி அளிக்கிறேன் என்று ஆசை காட்டினால் பலன் இருக்கும். ஆனால் வெகுமதியை விடக் குழந்தைதான் முக்கியம். அதைப் பெற்றோர் அவனுக்கு உணர்த்த வேண்டும். 'சைக்கிள் வாங்கித் தருகிறேன்' என்று சொல்வதோடு தந்தையின் கடமை முடிந்துவிடக் கூடாது. அவர் குழந்தையோடு கலந்து, உறவாடி, என்ன உதவி தேவையோ அதை அளித்து, அவன் அச்சைக்கிளைப் பெறுவதற்கு அவரே உதவ வேண்டும்.

கே: நம் குழந்தைகளை நாமே பாராட்டலாமா? அதனால் அவர்களுக்குக் கர்வம் வந்து விடுமா?

ப: நிச்சயமாக — தக்க நேரத்தில் பாராட்



* மருமகளுக்கு விட்டுக் கொடுக்கத் தயார்ப் படுத்திக் கொள்ள வேண்டும்.



* 'அம்மாவின் அன்பு முழுவதும் தங்கைக்குத்தானே?

டியே ஆக வேண்டும். அப்போதுதான் மீண்டும் நன்றாகப் படிக்கவோ சிறப்பாகச் செயல்படவோ அவர்களுக்கு ஆர்வம் இருக்கும். பிற குழந்தைகளுடன் ஒப்பிட்டு அவனைவிட நீ நன்றாகச் செய்திருக்கிறாயே என்றுபேசுவதில்தான் ஆபத்து இருக்கிறது. அதே சமயத்தில் பாராட்ட வேண்டிய நேரத்தில்பாராட்டாமல்இருப்பதும்ஆபத்து. ராமமூர்த்தியின் பெண் விமலா (பெயர்கள் மாற்றப்பட்டுள்ளன) அதி புத்திசாலி. தான் மாநிலத்திலேயே முதலாவதாகப் பத்தாம் வகுப்பில் தேறிய செய்தியுடன் அவள் தன் தந்தையிடம் ஓடி வந்தாள். ஏற்கெனவே அச்செய்தி அவரை எட்டியிருந்தது. மகளின் மனநிலையை உணர்ந்து மதிப்புக் கொடுக்காமல் அவர், 'அம்மாவிடம் கேட்டு ஒரு கப் காப்பி வாங்கி வா' என்று ஒற்றை வரியில் பதில் சொன்னபோது, விமலா தீர்மானித்தாள் — 'இனி உயிரைக் கொடுத்துப் படிப்பதில்லை; முதல் ராங்க் வர முயற்சி செய்யப் போவதில்லை!' என்று. பிறகு பிளஸ் டூவிலும் சரி, பட்டப் படிப்பிலும் சரி, அவள் தன் வகுப்பில் கூட முதல் ராங்க் வாங்கவில்லை!

கே: 'டீன் ஏஜ்'இல் எல்லாக் குழந்தைகளுமே மாறிவிடுகிறார்கள். பெற்றோர்களுக்கு அது சிறிது அதிர்ச்சியைக் கூடத் தருகிறது. இந்தக் கட்டத்தில் குழந்தைகளை எப்படிச் சமாளிப்பது?

ப: 'டீன் ஏஜ்' என்பது உடல், மன, மாற்றங்கள் இரண்டுமே துரிதமாக நிகழும் பருவம். இந்தப் பருவத்தில் குழந்தைகள் தனிமையை நாடுவார்கள். அதே சமயத்தில் அப்பருவம் வெகுவேகமாகக் கடந்து கொண்டிருப்பதை உணர்ந்து நிறைய அனுபவிக்க வேண்டும் என்று ஆசைப்படுவார்கள். கனவுகள் மலரும் பருவமும் இதுதான். இந்தச் சமயத்தில் குழந்தைகளின் தனிமை வேட்கையை மதிக்க வேண்டும். அதே நேரத்தில் அவர்களை வெகு ஜாக்கிரதையாகக் கண்காணிக்கவும் வேண்டும். அவர்களுடன் மனம் விட்டுப் பேச வேண்டும். அவர்களுடைய கனவுகளில் நட்போடு பெற்றோரும் சஞ்சரிக்க வேண்டும். கனவுகளை ஏளனம் செய்யவே கூடாது. 'நாங்களும் அத்தகைய கனவுகளைக் கண்டவர்கள்தான்' என்பதை வெளிப்படையாகச் சொல்ல வேண்டும். எந்த நேரத்திலும் உதவுவதற்குத் தாங்கள் தயாராய் இருப்பதைப் பெற்றோர்கள் உணர்த்த வேண்டும். அப்போதுதான் அனாவசிய வக்கிரங்களும் பயங்களும் குழந்தைகள் மனத்தில் வளராமல் இருக்கும்.

கே: உடலுறவு பற்றிய விவரங்களை எந்தப் பருவத்தில்குழந்தைகளுக்குச்சொல்லலாம்.

ப: அவர்கள் கேட்க ஆரம்பிக்கும் போது சொல்ல ஆரம்பிக்கலாம். ஆனால் படிப்படியாகப்புரியும்அளவிற்குக்கொஞ்சம்கொஞ்சமாகச் சொல்ல வேண்டும். எப்போதுமே அவர்களின் கேள்விகளுக்குப் பொய்யான, கற்பனையான பதில்களைச் சொல்லக் கூடாது. அப்படிச் செய்தால் உண்மையை அவர்கள் அறிய வரும்போது அது அவர்களுக்குப் பெரும் அதிர்ச்சியை அளிக்கும்.

கே: குழந்தைகள் எவ்வளவு காலம் பெற்றோரைச் சார்ந்து இருப்பார்கள்? எப்பொழுது சுதந்திரமாகிறார்கள்?

ப: ஒரு முக்கியமான விஷயத்தை அனேகம் பெற்றோர்கள் மறந்து விடுகின்றனர். ஒவ்வொரு குழந்தையும் ஒரு தனி நபர் என்கிற உண்மைதான் அது. ஒரு சிறுமி என்னிடம் ஒரு முறை தன் தாயைப் பற்றிக் குறிப்பிடும்போது சொன்னாள்: 'அவர் ஒரு துறைமுகம் போல் இருந்தார் — எதுவும் செய்யவோ சொல்லவோ இல்லை. தேவைப்பட்ட போது கப்பலைப் போல் அவர் கரங்களில் நான் அடைக்கலம் தேடினேன். பிறகு வெளியேறிச் சுதந்திரமாக என் பாதையில் சென்றேன்!' பெற்றோர்களின் பங்கை இதை விட அழகாக விளக்க முடியாது. மிகச் சிறிய குழந்தைகள் உடலாலும் உள்ளத்தாலும் பெற்றோர்களைச் சார்ந்து இருப்பது உண்மைதான் என்றாலும் அந்தச் சார்பே பெற்றோருக்குக் குழந்தைகளின் வாழ்க்கையை நிர்ணயிக்கும் உரிமையையோ வகுக்கும் உரிமையையோ கொடுத்துவிடுவதில்லை. குழந்தைகளின் தனித்தன்மையையும் சுதந்திரத்தையும் என்றைக்குமே மதிக்க வேண்டும். அவ்வாறு செய்ய இயலாத பெண்கள் மகன்களைத் தங்கள் கட்டுப்பாட்டிலேயே வைத்துக் கொள்ள விரும்புகிறார்கள். மோசமான மாமியார்களாக விளங்குகிறார்கள். பெற்றோர்கள் தங்களை வழிகாட்டிகளாக நினைத்துக்கொண்டால் குழந்தைகளுடன் சம அந்தஸ்தில் பழக முடியாது. அவர்கள் குழந்தைகளுடன் வாழ்க்கைப் பாதையில் இணையாக நடந்து செல்லும் நல்ல நண்பர்களாக இருக்க வேண்டும்.



ஒவ்வொரு குழந்தைக்குள்ளும் ஒரு radar system....

கே: தற்போது இரண்டு பெற்றோர்களுமே வேலைக்குச் செல்பவர்களாக இருக்கிறார்கள். காப்பகங்களிலோ, வேலைக்காரர்களிடமோ, உறவினர்களிடமோ விட்டுச் செல்லப்படும் குழந்தைகளின் மனநிலை பாதிக்கப்படுகிறதா?

ப: இரண்டு பெற்றோர்களும் ஒருமனதாகத் தீர்மானித்து, குழந்தை பிறந்த பிறகும் தாய் வேலைக்குப் போவது என்று முடிவு செய்தால் குழந்தையைத் தகுந்த பாதுகாப்பில் விட்டுச் செல்வதில் தவறில்லை. ஆனால் வீட்டில் இருக்கும் நேரத்தைக் குழந்தைகளுடன் சிறந்த பயனுள்ள வகையில் செலவிட வேண்டும். எவ்வளவு நேரத்தைக் குழந்தைக்காகச் செலவிடுகிறோம் என்பதைவிட அதை எப்படிச் செலவிடுகிறோம் என்பதே முக்கியம்.

கே: முழு நேர வேலைக்குப் போகும் பெண்களுக்கு வீட்டு வேலையும் சேர்ந்து கொண்டு வேலைப் பளு மிக அதிகமாக உள்ளதே. அந்த டென்ஷனில் அவளுக்குக் குழந்தையைக் கவனிக்க இயலவில்லையே.

ப: இயலாது என்பதே கிடையாது. நாம் எதை முக்கியமாகக் கருதுகிறோமோ அது நிச்சயம் நமக்கு இயலும். குழந்தையைக் கொஞ்சுவதை விட ஒட்டடை அடிப்பது தான் முக்கியம் என்று நினைத்தால் அதைத்தான் நாம் செய்வோம். அந்தச் சமயத்தில் குழந்தை காலைச் சுற்றி வந்தால் எரிச்சலை அதனிடம் காட்டுவோம்.

கே: உண்மை, நேர்மை, கண்ணியம் போன்ற பண்புகளை அடைய, வாழ்க்கையைச் சீரான கண்ணோட்டத்துடன் அணுகக் குழந்தைகளுக்கு எப்படிக் கற்றுத் தருவது?

ப: இவை கற்றுத் தந்து வருபவையல்ல; நிச்சயமாக இவற்றைத் திணிக்கவும் முடியாது. பெற்றோர்கள் எடுத்துக் காட்டாய் விளங்க வேண்டும். ஆரோக்கியமான சூழ்நிலைகளைக் குழந்தைகளுக்கு வழங்க வேண்டும். இத்தகைய சூழல்களில் வளரும் குழந்தைகள் நல்லியல்புகளையும் பண்புகளையும் தாங்களே அடைகிறார்கள். எரிக் பெர்ன் (Eric Berne) என்ற நிபுணர், ஒவ்வொரு குழந்தைக்குள்ளும் ஒரு 'Radar System' இருக்கிறது என்று சுட்டிக்காட்டியுள்ளார். தங்களைச் சுற்றி நடப்பவற்றை உணர்ந்து பதிவு செய்து கொள்ளும் இச்சக்தியைக் குழந்தைகள் பிறக்கும் போதே பெற்றிருக்கின்றன என்பதைப் பெற்றோர்கள் மறக்கக் கூடாது.

— எஸ். சந்திரமௌலி

அட்டை வண்ணப்படம், புகைப்படங்கள்:

**கே. வி. ஆனந்த்**

# மாயவரம் பைனான்ஷியல்

## சிட் கார்ப்பொரேஷன் லிமிடெட்,

(1918-ம் வருட இந்திய கம்பெனிகள் சட்டத்தின் கீழ் இணைக்கப்பட்டது)

பதிவு அலுவலகம் : 18-H கச்சேரி ரோடு,

நிர்வாக அலுவலகம் : 13-A1, கச்சேரி ரோடு

மயிலாடுதுறை-609 001, தமிழ்நாடு.

"எங்களின் மாபெரும் வளர்ச்சிக்குக் குறிக்கோளாக உள்ளவை சீட்டு எடுக்காதவர்களின் பணத்தின் பாதுகாப்புக்காகச் செயல்படுவதே."

### காரணங்கள்

1 தரம், தகுதி பார்த்துத் தேர்ந்து எடுத்து மெம்பர்களைச் சேர்ப்பது.

2 ஒரு தொழில் சார்ந்தோர்கள் ஒருவருக்கு ஒரு சீட்டுக்கு மேல் பிராஞ்சு அலுவலக எல்லைக்கு அப்பால் வழங்காதது.

3 தவிர்க்க முடியாத சந்தர்ப்பங்களில் முந்தைய சீட்டு முடியும் தருவாயில் உள்ளவர்களுக்கு மட்டுமே இரண்டாவது சீட்டு வழங்குவது.

4 ஏலம் எடுத்தவர்களுக்குச் சீட்டுத் தொகையைப் பட்டுவாடா செய்வதற்கு முன், வங்கி உத்திரவாதமோ அல்லது நகர எல்லைக்குட்பட்ட குடியிருப்புக் கட்டிடம் ஜாமீனாகக் கண்டிப்பாகப் பெற்றுக் கொள்வது.

5 ஏலம் எடுத்த பிறகு பின் பாக்கித் தொகை குறைவாக இருப்பின் உயர் சம்பளம் பெறும் அரசு, வங்கி அல்லது தனியார் துறை கம்பெனி அலுவலர்களின் ஜாமீன் ஏற்பது.

6 தொழிலில் போட்டி மனப்பான்மை இல்லாது முன்னேற்றம் காண்பது. அதாவது "நிதானமும், உறுதியும் பந்தயத்தில் வெற்றியை அளிக்கும்" என்ற நோக்கத்தில்,

7 சட்ட வரம்புகளுக்குட்பட்டும், நிதி கட்டுப்பாட்டுடனும் சந்தாதாரர்களின் நன்மைகளைப் பாதுகாப்பது.

**கிளைகள் :**

| | போன் : | | போன் : |
|---|---|---|---|
| 1. சென்னை | — 25176<br>25636 | 6. கோயம்புத்தூர் | — 37115 |
| 2. சேலம் | — 66837 | 7. காஞ்சிபுரம் | — 3123 |
| 3. பாண்டிச்சேரி | — 24547 | 8. காரைக்கால் | — 353 |
| 4. திருப்பாப்புலியூர் | — 326 | 9. சிதம்பரம் | — 2427 |
| 5. கும்பகோணம் | — 20544 | 10. தஞ்சாவூர் | — 20510 |

### எல்லாவற்றிற்கும் மேலாக

எங்களின் நிர்வாகம் 47 ஆண்டுகளுக்கு மேலாக சீட்டுத் தொழிலில் அனுபவமும், தேர்ச்சியும் பெற்றோரால் நிதி கட்டுப்பாட்டுடனும், முன் ஜாக்கிரதையுடனும் நடத்தப்பட்டு வருவதும், மதிப்புமிக்க எங்கள் சந்தாதாரர்களின் நலன் காப்பதில் உள்ள நாட்டமும், இது விபரம் தெரிந்தோர் அனைவரின் நன் மதிப்பையும், நம்பிக்கையையும் பெற்றதற்கு காரணங்களாகும்.

மயிலாடுதுறை,
14.1.1988.

R. கல்யாணசுந்தரம்
மானேஜிங் டைரெக்டர்



# வீடு மனைவி மக்கள்

குடும்பக் கதை!

குடும்பத் தலைவர் விசு. தலைவி கே. ஆர். விஜயா. கல்யாணம் பண்ணிக் கொண்டும் மனைவியைக் கவனிக்காமல், ஒரு டிஸ்கோ டான்ஸருடன் காலந்தள்ளும் மூத்த பிள்ளை; கல்யாணமாகாமலே ஏக்கப் பெருமூச்சாக விட்டுத் தள்ளும் பெரிய பெண்; வேலை தேடி ஆபீஸ் ஆபீஸாக ஏறி இறங்கும் இளைய பிள்ளை; கு தூ க ல மா ன கன்னிப் பெண்ணுகக் கடைக்குட்டி.

தலைவர் விசுவிற்கு இந்த நான்கு மக்களும் கொண்டு வரும் பிரச்னைகள் தவிர, அவர் குடியிருக்கும் காலனி வீட்டின் சொந்தக்காரி புஷ்பலதா இன்னொரு தலைவலி.

திரைக்கதையைப் பின்னு பின்னென்று பின்னியிருக்கிறார்கள்.

விசு — ஆல் ரூஷ¬வல் — அமர்க்களப் படுத்துகிறார்.

ஒவ்வொரு தடவையும் பிள்ளையார்தான் பிடிக்கப் பார்க்கிறார். ஆனல் அது குரங்காக மாறும்போதுதான் நம்மை ச்ச்... ச்ச் என்று சூன்கொட்ட வைத்து விடுகிறார்.

இடைவேளைக்குக் கொஞ்சம் முன்னல் ஒரு பரபரப்பை ஏற்படுத்துகிறார்கள் பாருங்கள் — நாற்காலி முனைக்கே நம்மைக் கொண்டு வந்து உட்கார வைத்து விடுகிறார்கள்.

திரைக்கதை — டைரக்ஷனுக்குப் பொறுப் பேற்று இருக்கும் டி. பி. கஜேந்திரனை இந்தப் பரபரப்பிற்காகவே ஒரு முறை பாராட்டியாக வேண்டும்.

ஆனந்த்பாபுவின் டான்ஸ் சீனில், விசு அந்த இரட்டை வழுக்கைகளை ரசிக்கிறரே அதுவே நன்ருக இருக்கிறது — டான்ஸை விட.

இடைவேளைக்கப்புறம் திருந்திய பிள்ளைகள் எல்லாம் தடால், தடால் என்று தடம் மாறிவிட கதை, 'இதுதானு, வாழ்க்கை?' என்று கேட்க வைத்து விடுகிறது.

பாண்டியன் நன்றி மறக்காத காரெக்டர். நிறையஸீன்கள் இல்லாததாலோ என்னவோ மனத்தில் நிற்கிறர்.



விசு மேஸ்திரியும் விஜயா சித்தாளும், 'செங்கலத் தூக்குற' என்று பாடிக்கொண்டே வீடு கட்டும் இடத்தில், பாட்டும் சரி, சிச்சுவேஷனும் சரி, ரசிக்கிறற்போல் அமைந்திருக்கிறது.

இன்னெரு நல்ல பாட்டு, 'நம் வீடுதான், இது பொன் வீடுதான்.'

அவ்வளவு ஜாலியாகப் போய்க் கொண்டிருக்கும் கதையில், விஜயாவிற்குத் திடீரென மூச்சிரைப்பானேன், ரத்தம் வரவர, வெட்டி அந்த மோதிரத்தைக் கழற்றுவானேன்? பரிதாபத்தைச் சம்பாதித்துக் கொள்ள வேண்டியதுதான். அதற்காக இப்படிப் பிழியப் பிழியவா?

கதை டிபார்ட்மெண்ட் திருப்தியாக அமைந்து விட்டதாலோ என்னவோ, காமிரா டிபார்ட்மெண்ட் ஏனே தானேவென்று அமைந்து விட்டது.

முழுக்க முழுக்க நகைச்சுவை மிளிர்கிறது என்றலும், எஸ். வி. சேகரின் ரேடியோ நகைச்சுவையைக் குறிப்பிட்டே ஆக வேண்டும். அதிகப்படியான சிரிப்பை அள்ளித் தந்த எஸ். வி. சேகருக்கு ஜே!

பார்க்கலாம், சிரிக்கலாம், வெளியே வருகையில் மட்டும் கனமான நெஞ்சுடன் வர நீங்கள் தயார் என்றல்.

— ஜெயமன்மதன்



* பங்கு மார்க்கெட்டில் பணம் போடுவது எதற்காக?
* இந்தியாவிலேயே பணக்காரப் பிரதேசம் எது?
* தமிழகம் தொழில் துறையில் முன்னேறுகிறதா?

# வார்த்தை ஜாலம் வளம் பெருக்குமா?

உத்தியோகத்திலிருந்து ஓய்வு பெற்ற போது கிடைத்த இருபதாயிரம் ரூபாயையும் அப்படியே கம்பெனி டெபாஸிட்டில் போட்டு விட்டேன். பதினாறு சதம் வட்டி கிடைக்கிறது என்றான் கோவிந்தன்.

அது சரி. ஆனால் உன் பணம் மூன்று வருஷங்கள் கழித்துத் திரும்பி வரும்போது ரூபாயின் மதிப்பு வெகுவாகக் குறைந்து போயிருக்குமே! இதை ஈடுகட்ட நீ ஷேர்கள் வாங்கியிருக்க வேண்டும். பங்குகளின் மதிப்பு உயர்ந்து பண வீக்கத்தினால் ஏற்படும் இழப்பைச் சமன் செய்யும். தவிர, உன் முதலீட்டுக்குக் கணிசமான வருவாயும் கிடைத்துவரும் என்றான் முகுந்தன்.

என் போதாத வேளை, பங்குகளின் மதிப்பு உயர்வதற்குப் பதில் குறைந்து போனால் என்ன செய்வது? என்று திருப்பிக் கேட்டான் கோவிந்தன்.

இருவருடைய கூற்றிலும் நியாயம் இருக்கத்தான் செய்கிறது. மத்திய தர வகுப்பினர் ஷேர் மார்க்கெட்டில் இறங்குவது என்பது கடந்த பத்து ஆண்டுகளாகத்தான். அதற்கு முன்பு கம்பெனிகளின் பங்குகள் குறிப்பிட்ட சில செல்வந்தர்களிடம் மட்டுமே இருக்கும். சில பெரிய நிதி நிறுவனங்கள் வசத்திலும் இருக்கும். 84 – 85 – இல் மத்திய தர வகுப்பினர் பெருமளவில் பங்குகள் வாங்க ஆரம்பித்தனர். இதனால் ஷேர் மார்க்கெட்டில் சூடு பிடித்தது. பங்குகளின் விலைகள் எக்கச்சக்கமாக உயர்ந்தன. எனவே, 'ரூபாயின் மதிப்புக் குறைவதால் ஏற்படும் நஷ்டம் ஈடுகட்டப்படும்' என்று பங்குதாரர்கள் மகிழ்ந்தார்கள். ஆனால் இந்தச் சந்தோஷம் அதிக காலம் நீடிக்கவில்லை. 87 தொடக்கத்தில் – பல பங்குகள் வீழ்ச்சி அடைந்தன. 87 அக்டோபர் – டிசம்பரில் அடி மட்டத்துக்கே போய்விட்டன! இதற்குக் காரணம், புதிதாக 84 – 85 – களில் தோன்றிய நிறுவனங்கள் பல திறம்பட இயங்காமல் நஷ்டமடைந்ததுதான்! இவற்றின் பங்குகள் ஒன்றுக்குப் பாதி விலைக்கு விற்பனைக்கு வந்தாலும் சீந்துவாரின்றிக் கிடந்தன. தாங்கள் முதலீடு செய்யும் பணத்துக்கு 12 முதல் 15 சதவீதம் வரை வருமானம் மட்டுமின்றி, பண வீக்கத்துக்கும் நிவாரணம் பெறலாம் என்று கருதிய பலர் அதிர்ச்சியுற்றனர். லாபமில்லை. அதனால் லாபத்தில் பங்குமில்லை. பங்குகளின் விலையும் சரிந்தன!

இந்த நிலைமையைச் சீர்திருத்த மத்திய அரசாங்கத்தின் பொருளாதாரத் துறையும் பல்வேறு நகரங்களில் உள்ள பங்கு மார்க்கெட் கேந்திரங்களும் சேர்ந்து முயற்சிகளை மேற்கொண்டு வருகின்றன. முதலீடு செய்யும் மக்களுக்கு நம்பிக்கை ஊட்ட, தக்க நடவடிக்கைகளை எடுத்து வருகின்றன. இதற்காகச் சில சட்டதிட்டங்களையும் விதிமுறைகளையும் அரசு வகுத்து வருகிறது.

நாட்டிலேயே அதிக அதிகாரமும் செல்வாக்கும் மிக்கவர்கள் புதுதில்லியில் இருக்கலாம். ஆனால் செல்வமெல்லாம் குவிந்திருப்பது மேற்கே குஜராத்திலும், மகாராஷ்டிரத்திலும்தான்! தேசத்தின் பல்வேறு பங்கு மார்க்கெட் கேந்திரங்களில் நாலாயிரத்துக்கு மேற்பட்ட நிறுவனங்கள் பட்டியலிடப்பட்டுள்ளன. ஆனால் இவற்றில் பத்து சதவீதம் நிறுவனங்களின் பங்குகளில்தான் வியாபாரம் நடக்கிறது. இந்த நிறுவனங்கள் ஒவ்வொன்றின் பங்குகளிலும் 80 சதவீதத்தை அந்த நிறுவனத்தை ஆரம்பித்து நடத்துகிறவர்களே வைத்திருக்கிறார்கள். அல்லது அவர்களுக்கு நிதி உதவி அளித்த நிறுவனங்கள் தம் வசம் வைத்துள்ளன. மீதி இருபது சதம் பங்குகள்தாம் மக்களிடையே பரவலாக உள்ளது. இந்த இருபது சதத்தில்தான் பங்கு மார்க்கெட் வியாபாரமும் நடக்கிறது!

நாட்டின் பல்வேறு தொழிலகங்களின் பங்குகளில் மொத்தம் முதலீடாகியுள்ள பணம் நூறு என்றால் அதில் 75 சதம் முதலீடு செய்திருப்பது குஜராத், மகாராஷ்டிரா ஆகிய இரு மாநிலங்கள்தாம்! தென்னக மாநிலங்கள் முழுவதுமாகச் சேர்த்துப் பார்த்தாலும் ஐந்து சதவீதம் கூடத் தேறாது! வடக்கு கிழக்கு மாநிலங்களின் வசம் இருபது சதவீதம் உள்ளது. 85 – 86ல் பம்பாய் பங்கு மார்க்கெட்டில் ஒரு நாளைக்கு முப்பது கோடி ரூபாய்க்குப் பங்குகள் கைமாறி வியாபாரம் நடந்தது. இன்று ஒரு நாளைக்கு ஆறு கோடி ரூபாய்க்குத்தான் வியாபாரம்!

பம்பாயில் என்ன வியாபாரம் நடக்கிறதோ அதில் பத்தில் ஒரு பங்கு வியாபாரம்தான் சென்னையில் நடக்கும்!

இப்படிப்பட்ட ஒரு நிலைமையில் தமிழகம் தொழில் வளத்தில் முன்னேறுகிறது முன்னேறுகிறது என்று கூறி நம்மை நாமே ஏமாற்றிக் கொள்வதுடன் பிறரையும் ஏமாற்றி வருவதில் பொருள் என்ன?

— வி. கோபாலன்.




விவரமறிந்தோர் நாடுவது
ஆஸ்ப்ரோ ஆறுதல்



அதி உன்னதமான
தலைவலி
நிவாரணி
உலகெங்கும் பல லட்சம் பேரின் நம்பிக்கை மருந்து







ஊ!
ஆ!
ஔச்!
"ஊ" "ஆ" "ஔச்" இவ் வேதனைக் குரல்கள் வேண்டாமே!
சுளுக்கு, தசை பிடிப்பு, மூட்டு சோர்வு ஆகியன போலவே, பொதுவான உடல், முதுகு வலிகளும் துன்பந்தரும். அதற்குக் கவனம் தேவை.
எனவே, கைவசம் அயொடெக்ஸ் இருப்பது நல்லது.
அயொடெக்ஸ் வலியாற்றுவதோடு, திசுக்களின் பாதிப்பைக் குணப்படுத்துகிறது.
இருமுறை அயொடெக்ஸ் தினம் தடவ, இரு மடங்கு குணம் கிடைக்கும்.
''ஊ'' ''ஆ'' ''ஔச்'' என்ற வேதனைக் குரல்களை விரட்டி, மீண்டும் செயல்பட, அயொடெக்ஸ் தேவை.
போடுவீர்
அயொடெக்ஸ்®
புறப்படுவீர் ஓடியாட.
IODEX
SKOF
SKOF
HTA 1711


எம்.ஜி.ஆர் சமாதி
ஜனநாயக மரபுகள்
இன்னும் எதுக்குச் சமாதி கட்டணும்?.. சொல்லுங்க!
அரசியல் நாகரிகம்
தமிழக அரசியல்


ஜனாதிபதி ஆட்சி




பயங்கர வாதிகள்
சீக்கிய மக்கள்
குடியரசு தினத்திலே பயங்கர வாதத்தை ஒழிக்கணும்னு நான் சொல்லிட்டேன்! நீயும் சபதம் பண்ணு! நான் இருக்கேன்! எதுக்கும் பயப் படவேணாம்! தைரியமா இரு!




# கல்கி

1988 பிப்ரவரி 7
மலர்: 46 இதழ் 28
பிரபவ தை 24




# ஜனவரி இருபத்தெட்டு!

தமிழனுக்குத் தன்மானம் என்பது இருக்குமானால் அவன் ஜனவரி இருபத்தெட்டை ஆயுளுள்ள வரை மறக்கவே மாட்டான்.

வீடு சிரிக்க, வீதி சிரிக்க, ஊர் சிரிக்க, உலகம் சிரிக்க, ரௌடித்தனமாக நடந்து கொண்டு தமிழகத்துக்குத் தலைகுனிவை ஏற்படுத்திய எம். எல். ஏக்களையும் அவர்கள் சார்ந்திருக்கும் கட்சிகளையும் மறக்கவே மாட்டான்.

எம். ஜி. ஆரின் உடல் அடக்கமாவதற்கு முன்பே கோஷ்டிப் பூசலை உருவாக்கி, பதவிப் பித்துப் பிடித்து அலைக்கழிக்கப் பேயாட்டம் போட்டவர்களைத் தன்மானத் தமிழன் மறக்க மாட்டான்.

பரபரப்பான ஓர் அரசியல் நாவலில் எழுதப்பட்டால், 'நம்பும்படியான யதார்த்தமே இல்லை' என்று விமர்சனம் பெறக் கூடிய வகையில் நமது எம். எல். ஏக்கள் நடந்து கொண்டதை சுய மரியாதை உள்ள எந்தத் தமிழனும் மறக்க மாட்டான்.

'வானமே என் அதிகாரத்தின் எல்லை' என்று கூறிக் கொண்டு கட்சித் தாவல் சட்டத்தை ஒரு மிரட்டல் ஆயுதமாகப் பயன்படுத்திய சபாநாயகரைத் தன்மானமுள்ள தமிழன் மறக்கவே முடியாது. மனச்சாட்சியைக் கொன்று விட்ட, சுயசிந்தனையற்ற பொம்மைகளாகத்தான் எம். எல். ஏக்கள் நடந்து கொள்ள வேண்டும்; அல்லாது போனால் பதவிப் பறிப்பு என்ற அச்சுறுத்தலை நிஜமாக்கியும் வைத்தவரை; ஒரு டெலிஃபோன் செய்தியின் அடிப்படையில் காங்கிரஸ் எம். எல். ஏக்கள் பலர் ராஜினாமா செய்து விட்டதாகக் கூறி, சபை நடவடிக்கைகளை ஒத்தி வைத்த அவரது ஓரவஞ்சனையை, 'பிரச்னையை ஐ. நா. சபைக்குக் கொண்டு போவேன்' என்ற தேச விரோதப் போக்கைத் தன்மானமுள்ள தமிழன் நினைவில் வைத்திருப்பான்.

'ஆபத்து என்று வரும்போது எந்தப் புல்லையும் பற்றிக் கொள்ளலாம்' என்று சால்ஜாப்புக் கூறி, நிலைக்க முடியாத ஓர் ஆட்சிக்கு அதர்மமான முறையில், நேற்று வரை தங்களது பரம எதிரியாகக் கருதி வந்த ஒருவரிடம் போய்க் கையேந்தி நின்று ஆதரவுப் பிச்சை கேட்ட 'வீர'ரைத் தன்மானத் தமிழன் நன்றாக நினைவில் வைத்திருப்பான்.

போலீஸை மட்டுமின்றிக் குண்டர்களையும் சட்டசபைக்குள் வரவழைத்து, எம். எல். ஏக்களை அடித்து விரட்டிய அராஜக ஆட்சியைத் தன்மானத் தமிழன் மறக்கவே மாட்டான்.

பணத்தினால் எதையும் வாங்கிவிடலாம் என்ற திமிரில் காங்கிரஸ் எம். எல். ஏக்களுக்குப் பேரம் பேசிய ஆளும் கட்சியின் ஆணவப் போக்கைத் தன்மானமுள்ள தமிழன் மறக்க மாட்டான்.

கடைசி வினாடி வரை யாருக்குத் தன் ஆதரவு என்று கூறாமலிருந்து, தேவையற்ற குழப்பத்தை வளர்த்து, பேரம் பேசுவதையும் ஊக்குவித்து வந்த இ. காங்கிரஸ் கட்சியின் ஞானசூன்யத் தன்மையைத் தன்மானத் தமிழன் மறக்க மாட்டான். நேற்று பாரத ரத்னா வழங்கி இன்று அவரது மனைவியின் காலை வாரிவிட்ட அக்கட்சித் தலைமையைத் தன்மானத் தமிழன் மறவாதிருக்க முடி போட்டுக் கொள்வான்.

ஒரு சட்டசபைக் கட்சியின் தலைவரை அக்கட்சியின் எம். எல். ஏக்கள் கூடி, மனச்சாட்சிப்படி சுதந்திரமாக வோட்டளித்துத் தேர்ந்தெடுக்க முடியாதபடி எம். எல். ஏக்களைப் பூட்டி வைத்தும் ஊர் ஊராக அழைத்துப் போயும் ஆட்டு மந்தையாக்கிய அநாகரிகத்தைத் தன்மானத் தமிழன் மறக்க மாட்டான்.

ஒருவரை ஒருவர் கீழ்த்தரமாக ஏசிக் கொண்டதையும் அந்த ஏசலினூடே கோடிக் கணக்கான ரூபாய் ஊழல்கள் அம்பலமானதையும் மறக்கவே மாட்டான், தன்மானமுள்ள தமிழன்.

இந்த மட்ட ரகமான பூசல்களின் விளைவாக, ஆளுனர் மீதும் ஏன் குடியரசுத் தலைவர் மீதும் கூடச் சந்தேகங்கள் எழ, அவர்களைப் பத்திரிகைகள் பகிரங்கமாக இழித்துரைக்க நேர்ந்ததையும் இதனால் தேசத்துக்கே தலைகுனிவு ஏற்பட்டதையும் தன்மானத் தமிழன் மறக்கவே மாட்டான்.

கடைசி வினாடியில் கோஷ்டி மாறிய மாஜி அமைச்சரையும் அதற்கு அவர் கூறிய அசட்டுக் காரணத்தையும் சுயமரியாதை உள்ள தமிழன் மறக்கவே மாட்டான்.

மறக்காமலிருந்து, இவர்கள் அனைவருக்கும் அடுத்து வரும் பொதுத் தேர்தலில் பாடம் கற்பிப்பான். அனுதாப அலை எம். ஜி. ஆருக்கு மட்டுமே; இந்தக் காட்டுமிராண்டிக் கும்பல்களுக்கு அல்ல என்று நிரூபிப்பான்.

ஆனால், தமிழன் தன்மானமுள்ளவன்தானா?

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

வட்ட மேஜை

# இனியாவது விழி பிதுங்காதே!

* அடேங்கப்பா! ஒரு மாட்டு வண்டிக்குப் பின்னால் இத்தனை சாதனைகளும், சோதனை, வேதனைக் கதைகளும் இருக்கின்றனவா...? அரசு இவர்களுக்கு எந்த வித ஒத்துழைப்பும் தர முயற்சி செய்யாதது ஆச்சரியம் அளிக்கவில்லை. ஏனென்றால் மாட்டு வண்டியின் இன்றியமையாமையைப் பற்றி யாரும் இதுவரை யோசித்ததேயில்லையே. இனியாவது மாட்டு வண்டித் தொழிலாளர்களுக்கு ஒரு நல்ல காலம் பிறக்கட்டும்!!

விருதுநகர். கே. டி. ஆர். சேகர்.

* எம். ஏ., எம். ஃபில்., படித்த நிலையிலும் மாட்டு வண்டித் தொழிலாளர்களை ஒருங்கிணைத்து, அவர்களின் முன்னேற்றத்திற்காகப் பாடுபட்டுவரும் ஜாஸ்வின் தம்பியைப் பாராட்டத்தான் வேண்டும். அதே நேரம் அவர்கள் விஷயத்தில் மாற்றாந்தாய் போல் செயல்படும் அரசாங்கத்தை நினைக்கும் போது... வேதனைதான்!

திருத்துறைபூண்டி. ஜெ. பிஸ்மி.

* புதிதாக வந்திருந்தாலும் கூட, கல்கியின் உதவியால் மாவட்டத்தின் குறைகளை அறிந்து, அவற்றைப் போக்க ஆக்கபூர்வமான நடவடிக்கைகள் எடுத்து வரும் புதுக்கோட்டை மாவட்ட கலெக்டரின் பொறுப்புணர்வு மகிழ்ச்சியைத் தருகிறது.

திருநெல்லிக்காவல். எஸ். அரிஅரன்.

* 'நெருப்பை அணைக்கப் பெட்ரோல் ஊற்றுகிறார்!' என்ற தலையங்கம் சிந்தனைக்கு நல்ல விருந்தாக இருந்தது. தாங்கள் உதாரணம் காட்டிய ஆர். கே. லக்ஷ்மணின் கார்ட்டூனையும் சின்னதாகக் கல்கியில் பிரசுரித்திருந்தால், நாங்களும் அதைப் பார்த்து ரசிக்க ஒரு வாய்ப்புக் கிடைத்திருக்குமே!

மங்கநல்லூர். ஆர். செல்வராணி.

* 'மெஜாரிட்டி' எம். எல். ஏ.க்கள் வேண்டுமானாலும் ஜானகியை ஆதரிக்கலாம்; ஆனால் மதுரைப் பகுதியில் 'மெஜாரிட்டி' தொண்டர்கள் ஆதரிப்பது ஜெயலலிதாவை' என்று உங்கள் அட்டைப்படக் கட்டுரையின் அலசல் மூலம் உணர்ந்தோம்.

சென்னை — 16. அர. மணிவண்ணன்.

* ஒரு காலத்தில் ராஜாஜியா, காமராஜா என்ற போட்டியில் சிக்கியது தமிழகம். இரண்டு பேராலுமே நாட்டுக்கு நன்மை. இன்றோ ஜானகியா, ஜெயலலிதாவா என்ற பிரச்னை. யாருக்கு நன்மை? பத்திரிகைகளுக்கு மட்டும்தான் என்று தோன்றுகிறது.

சென்னை — 5. எஸ். வாணி சங்கர்.

* "மனப்பேய்தான் உண்மையில் பேய்" என்பதை அபூர்வன் "பிசாசு" சிறுகதை மூலம் சிந்திக்கத் தூண்டும் வகையில் உணர்த்தியிருக்கிறார்.

மேலகிருஷ்ணன்புதூர். ஆர். கே. லிங்கேசன்.

* நான் நினைத்தால் எதையும் செய்வேன், செய்ய முடியும் என்று கூறும் அரசியல்வாதிகளின் அட்டூழியங்களைத் தத்ரூபமாக, 'ஓர் எம். எல். ஏ.' சிறுகதை மூலம் படம் பிடித்துக் காட்டியிருந்தார் 'ராஜ் கோகுல்.'

சீர்காழி — 10. ஜெயப்பிரியன்.

* அடிக்கடி பெண் பார்க்க வருகிறவர்களால் நிராகரிக்கப்படும் சராசரி, மத்தியதர வர்க்கத்துக் குடும்பத்துப் பெண்ணின் மனநிலையை அப்படியே எக்ஸ்ரே பிடித்தது போல், பிரதிபலித்துக் காட்டியிருந்தது, "பெருமாள்புரத்தில் ஒரு பெண்" சிறுகதை.

திருப்பரங்குன்றம். டி. கே. சுப்பிரமணியன்.

* கல்கி 10.1.88 இதழில் "சுபமுகா" எழுதிய "மருந்தோடு மந்திரம்" என்ற கதை கோவையிலிருந்து வெளிவந்து கொண்டிருந்த "ஜனரஞ்சனி" என்ற வார இதழில் "மூட்டைப்பூச்சி மஹாத்மியம்" என்ற தலைப்பில் ஏற்கெனவே வெளிவந்துள்ளது. அக்கதைப் பிரதியை இத்துடன் இணைத்துள்ளேன். கல்கியில் ஏற்பட்ட இந்தத் தவறுக்குத் தாங்கள் தக்க நடவடிக்கை மேற்கொள்ள வேண்டும். ஜனரஞ்சனியிலும் சுபமுகாவே எழுதியிருக்கிறார்.

கோவை — 16. பாப்பம்பட்டி ராஜா.

(சுபமுகாவுக்கு நமது அதிருப்தியைத் தெரிவித்துக் கடிதம் எழுதியதற்குக் கிடைத்த பதில் கீழே தரப்பட்டுள்ளது. — ஆசிரியர்.)

* தங்கள் கடிதம் இன்று கிடைக்கப் பெற்றேன். மிக்க அதிர்ச்சி அடைந்தேன். எனது கதை, 'மூட்டைப்பூச்சி மகாத்மியம்' ஜனரஞ்சனி வார இதழில் வெளியாகியிருக்கும் செய்தி, தங்கள் கடிதம் பார்த்த பின்பே நான் அறிந்தேன்.

இக்கதையை 'ஜனரஞ்சனி' வார இதழுக்கு அனுப்பியது உண்மைதான். ஆனால், பிரசுரத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட விவரம் குறித்த கடிதமோ, அல்லது கதை வெளியான இதழின் பிரதியையோ அவர்கள் எனக்கு அனுப்பி வைக்கவில்லை. 'ஜனரஞ்சனி' இதழில் கதைகள் தேர்ந்தெடுக்கப்படவில்லை எனில், திருப்பி அனுப்பும் வழக்கமில்லையாதலால், நான் இந்தக் கதை தேர்ந்தெடுக்கப்படாததாகவே எடுத்துக் கொண்டேன். நிச்சயமாக, இதுதான் உண்மையே தவிர, 'கல்கி' இதழுக்குப் பங்கம் விளைவிக்கும் யாதொரு எண்ணமும் எனக்கில்லை. 'ஜனரஞ்சனி' என் படைப்புக்கு எந்தச் சன்மானமும் அனுப்ப வேண்டாம். கதை வெளியான இதழ் ஒன்றை எனக்கு அனுப்பி வைத்திருந்தால், இந்த ஒரு மோசமான சூழ்நிலைக்கு நான் உள்ளாகியிருக்க மாட்டேன். என்னால் கல்கிக்கு நேர்ந்த களங்கத்துக்கு என் மனமார்ந்த வருத்தத்தைத் தெரிவித்து மன்னிப்புக் கோருகிறேன்.

பெங்களூர் — 18. சுபமுகா.

* என் மகன் ராஜ்குமார் பிறவியிலிருந்து இருதய நோயாளியாக இருந்து வருகிறான். இப்போது அவனுக்கு ஆயுத சிகிச்சை செய்ய வேண்டிய நிலையில் இருக்கிறான். அவனைச் சென்னைப் பொது மருத்துவமனையில் சேர்த்தேன். அங்குள்ள பிரச்னைகளினால் ஆபரேஷன் செய்ய முடியவில்லை. விஜயா, அப்போலோ போன்ற ஆஸ்பத்திரிகளில் ஆபரேஷன் செய்ய ரூ. 50,000/— வரை செலவாகும். அந்த அளவுக்கு எனக்கு வசதியில்லை. என் மகன் ஆபரேஷனுக்குக் கல்கி வாசகர்கள் தங்களால் முடிந்த அளவு உதவி செய்ய அன்புடன் வேண்டுகிறேன்.

வத்தலகுண்டு. பி. ஏ. நடராஜன்.

பி. ஏ. நடராஜன்,
13-6-59, மேளக்காரத் தெரு,
வத்தலகுண்டு — 624 202.



# ஆகவே, செக்ஷன் 302 படி...

**4**

வெற்றி, அல்லது வீர மரணம் என்கிற தாரக மந்திரத்தை மனத்தில் வைத்து, நகருக்குள் நுழைய அனுமதி கேட்டு இடைவிடாத; போராட்டம் நடத்திக் கொண்டே இருந்தன அலைகள். அதனால், நனைந்த விழிகளுடன் கரையோர மணல்— உயிர் பிழைத்த நண்டுகள் தங்கள் வீடுகளைத் தொலைத்து விட்டு அல்லாடிக் கொண்டிருக்க— மேற்பார்வை விட மேக ஸ்வெட்டர் அணிந்து நிலா புறப்பட்டிருந்தது.

''ஆ! வலிக்குது'' என்றாள் நிவிதா.

''விரல்ல சொடக்கு எடுக்கிறதைக் கூடத் தாங்க முடியலையா? வார்த்தையால் மட்டும் பக்கம் பக்கமா வீர வசனம் பேசறே?'' என்ற வினோத் குமார் அவள் வலது கையின் மற்றொரு விரலை உள்புறமாக மடக்கி மறுபடியும் சொடக்கு எடுத்தான்.

''போதும். உங்ககிட்டே இதான் தொல்லை. யார் விரல் அகப்பட்டாலும் டொப்பு, டொப்புன்னு சொடக்கு எடுத்து விட்டுக்கிட்டு... இதென்ன பழக்கம்?''

''தொட்டில் பழக்கம். சுடுகாட்லதான் நிறுத்த முடியும் நிவி.''

''நல்லா இருக்கு பேச்சு. உங்க கம்பெனில ரெய்டு நடந்ததா போன வாரம் பேப்பர்ல படிச்சேனே...''

''ஆமாம். எக்கச்சக்க சொத்தில் ஓர் ஓரமா கொஞ்சூண்டு கிள்ளிக்கிட்டுப் போனாங்க. ஒண்ணும் பிரச்னையில்லை. ஒரே மாசத்தில அதைச் சம்பாரிச்சுடுவாங்க.''

''ஊர் ஊரா சுத்தற வேலையை விட்டுட்டு உங்க கம்பெனிலயே உக்காந்து பார்க்கிற மாதிரி வேறு வேலைக்கு மாத்திக்கக் கூடாதா வினோத்?'' என்ற நிவிதா காற்றில் முகத்துக்குக் குறுக்கே விழுந்த முடிக் கற்றையை ஒதுக்கி விட்டுக் கொண்டு ''இந்தாப்பா, சுண்டல்! இங்கே வா,'' என்றாள்.

''இதிலே என்ன பிரச்னைன்னு... எங்க கம்பெனில உள்ள இருபத்தி நாலு சேல்ஸ் ரெப்ரசன்டேட்டிவ்களும் சம்பளத்துக்காக மட்டும் உழைக்காம, உண்மையான ஈடுபாட்டோட நான் உழைச்சுத் தொலைக்கிறேன். இந்த மாசம் எனக்குப் பதினஞ்சு லட்சம் விற்பனை லட்சியம் நிர்ணயிச்சாங்கன்னு, நான் இருபது லட்சத்துக்குச் சாதிச்சுக் காட்டிடறேன். அதனால மேலாள்கள்கிட்டே பேசறதிலேயும், விற்பனையை அதிகரிக்கிறதிலேயும் வினோத் குமாரை மாதிரி யாரும் செய்ய முடியாது, அதிலயே இருக்கட்டும்னு சொல்லிடறாங்க.''

சுண்டல் வாங்கிச் சாப்பிட்டுக் கொண்டு மேலே பேச ஆரம்பித்த வினோத், அவர்களுக்கு மிகவும் அருகில் நடந்து நிவிதாவையே இமைக்காமல் பார்த்துக் கொண்டு கடந்தவனைப் பார்த்து, ''உனக்குத் தெரிஞ்சவனா?'' என்றான்.

''இல்லையே.''

''வேற கிரகத்திலேர்ந்து வந்தவன் மாதிரி அப்படி பார்க்கறான் இடியட். போய் ஏண்டா நீ பொம்பளையையே பார்த்ததில்லையான்னு கேட்டுட்டு வரட்டுமா?''

''விடுங்க வினோத். இதெல்லாம் சகஜம்.''

''என்ன சகஜம்? ஒரு நாகரிகம் வேணும்? பக்கத்திலே ஒரு ஆம்பளை உக்காந்திருக்கிறப்பவே இப்படி இங்கிதமில்லாமல் பார்த்தா, தனியா இருந்தா? ராஸ்கல்ஸ்!''

''இப்ப என்ன ஆய்டுச்சி வினோத்? ஏன் இவ்வளவு தூரம் டென்ஷனாறீங்க?''

''என் நிவிதாவை இன்னொரு ஆம்பளை தேவைக்கதிகமா ஒரு வினாடி பார்க்கிறதுகூட எனக்குப் பிடிக்கலை.''

''அதுசரி. அப்படின்னா நாளையிலேர்ந்து ஒரு பர்தா வாங்கிப் போட்டுக்கிட்டுத்தான் நான் ஆபீஸ் போகணும்,'' என்று நிவிதா சிரிக்க...

கொஞ்சம் கோபம் வடிந்து வினோத்தும் அந்தச் சிரிப்பில் இணைந்து கொண்ட போது, இந்தப் பக்கத்திலிருந்து அந்தப் பக்கம் போன அதே நபர் இப்போது கையில் முறுக்குடன் மறுபடி அவர்களுக்குப் பக்கமாக அவளைப் பார்த்துக் கொண்டே அந்தப் பக்கத்திலிருந்து இந்தப் பக்கம் நடந்தான்.

அவனைக் கவனித்து விட்ட வினோத்குமார், ''படவா! இரு. இந்தச் சுண்டலைப் பிடி. நான் போய் அவனை...'' என்று எழ முயல... அவன் கையை அழுத்தமாகப் பிடித்து அமர்த்தினாள் நிவிதா.

''சும்மா உக்காருங்க வினோத். இன்னொரு

பட்டுக்கோட்டை பிரபாகர்

தடவை இதே மாதிரி அவன் வந்தா, அப்ப பேசிக்கலாம். அநாவசியத்துக்கு எதுக்காக நம்ம மூடைக் கெடுத்துக்கணும்? அப்புறம்? சொல்லுங்க. அடுத்த டூர் எப்ப ஆரம்பிக்கிறீங்க?''

அவர்களைக் கடந்தவன் மணலில் அழுந்தி நடந்து, தூரத்தில் தன் காரின் பானெட் மேல் நாயை உட்காரவைத்து அதன் தொங்கின காது மடலைத் தடவிக் கொண்டே புகை பிடித்துக் கொண்டிருந்த ஷியாமிடம் வந்தான்.

''என்ன தீபக், பார்த்தியா?''

''ஓ. ரொம்ப பக்கமாப் போயே பார்த்துட்டேன். ரெண்டு தடவை.''

''என்ன சொல்றே?''

''நீ சொன்னது தப்பு ஷியாம்.''

''என்னடா இப்படி சொல்றே?''

''நீ என்ன சொன்னே? நிவிதான்னு புதுசா ஒரு பொண்ணு மாற்றலாகி வந்திருக்கா, சினிமா ஸ்டார் மாதிரி இருப்பான்னு சொன்னே.''

''ஆமாம். அது மாதிரி இல்லேயா?''

''இல்லே. நிச்சயமா இல்லே. சினிமா நட்சத்திரம் எல்லாம் வரிசையா வந்து இவ காலைத் தொட்டுக் கும்புடணும் ஷியாம். அதெல்லாம் மேக்கப் மின்னல். இது அப்படியா? தேவதைன்னுகூட என்னால சொல்ல முடியாது. ஏன்னா நான் தேவதையைப் பார்த்ததில்லேயே. எப்படிச் சொல்றது? 'ராவிஷிங் பியூட்டி'ன்னு சொல்லலாமா? அதுகூடக் கம்மிதான்.''

— என்ற தீபக் ஷியாமின் சட்டைப் பையிலிருந்து லைட்டர் எடுத்து, தன் சிகரெட்டைக் கொளுத்திக் கொண்டு தனது ஃபியட் காரின் முன் பகுதியில் குதித்து அமர்ந்து கொண்டான்.

''காலைலதான் ஊர்லேர்ந்து வந்திருக்கா. லேடீஸ் ஹாஸ்டல்ல தங்கியிருக்கா. சாயங்காலம் பீச்சுக்கு வந்துட்டா. கொஞ்சம் தைரியமான பொண்ணுதான். யார் அவன்? அவங்க பேசிக்கிட்டது எதுவும் கேட்டியா தீபக்?''

''இல்லே. எதுவும் காதுல விழலே. நிச்சயம் அண்ணன், தங்கச்சி இல்லே. ரெண்டே சான்ஸ்தான். நண்பன் இல்லேன்னா காதலன்.''

''காலைல பார்த்ததிலேர்ந்து உள்ளுக்குள்ளே ஒரு புறா இறக்கை அடிச்சிக்கிற மாதிரி ஒரே படபடப்பா இருக்கு தீபக். வேலையே ஓடலே. பர்சனல் ஃபைலை வரவழைச்சு, அவ அப்ளிகேஷன்ல ஒட்டியிருந்த ஃபோட்டோவையே போன்கூட எடுக்காமல் பார்த்துக்கிட்டிருந்தேன்.''

''ஹேய், இங்க பாருப்பா. காதலிக்கலாமான்னு எதுவும் யோசனையா?''

''சேச்சே. அதெல்லாம் இல்லே. காத்திருக்கலாமான்னுதான் யோசனை.''

''எதுக்கு?''

''கட்டில் மேல அவள். அவன் பக்கத்தில் நான். அந்தச் சந்தர்ப்பத்துக்கு.''

''பார்த்தா நல்ல குடும்பத்துப் பொண்ணு மாதிரி தெரியுது ஷியாம்.''

''சரி. இருக்கட்டுமே. அதனால...?''

''வம்பு வேணாம்ப்பா. மாசம் ஒரு தடவை, ரெண்டு தடவை பெங்களூர், பம்பாய்ன்னு போறோம். ஜாலியா இருக்கோம். வந்துடறோம். எந்தப் பிரச்னையும் இல்லே. நம்ம இமேஜும் பாதிக்கப்படறதில்லே.'' என்று முறுக்கைக் கடித்தான்.

''அதுவும், இதுவும் ஒண்ணா? உனக்கு அது அலுத்துப் போகலே? ஒரு தொழிலா, கடமையா, பணத்துக்காக, எந்திரத்தனமா நடந்துக்கறாங்களேயொழிய.. ஒரு ஈடுபாடு இருக்கா? சொல்லு. இவ்வளவு ஏன்? உனக்கு ஜெயாவைப் பத்தி எத்தனை தடவை சொல்லியிருக்கேன்? நான் நிச்சயமா அவளைக் கல்யாணம் பண்ணிக்கப் போறேன்ங்கிற நம்பிக்கையில எனக்கு எவ்வளவு சுதந்திரங்கள் கொடுத்தா? அஞ்சு தடவை என்னோட பெங்களூர் வந்தா. பயந்துக்கிட்டே, தயங்கிக்கிட்டே, மறுத்துக்கிட்டே எல்லாத்துக்கும் சம்மதிச்சா. அது ஈடுபாடு! அதான் த்ரில்!''

''இப்ப எங்கே இருக்கா ஷியாம்?''

''விஜயவாடால. ஒரு பாங்க் மானேஜரைக் கட்டிக்கிட்டுச் சௌக்யமா இருக்கா. ரெண்டு பசங்க வேற. ஒரு தடவை சென்ட்ரல்ல பார்த்தேன். புருஷனை அறிமுகப்படுத்தி வச்சா — தர்மசங்கடத்தோட. அவர் என்னடான்னு விவஸ்தை இல்லாம அட்ரஸ் கொடுக்கிறேன், அவசியம் வீட்டுக்கு வரணும்னு சொல்லி அவகிட்டே கார்டு எடுத்துக் கொடுன்றார். ரயில் புறப்படப் போகுது, வாங்கன்னு அழைச்சிக்கிட்டுப் போய்ட்டா.''

''நாலு வருஷம் இருக்குமா?''

''இருக்கும். ஜெயாவுக்கு அப்புறம்... என் மனசு சலனப்பட்டிருக்கிறது நிவிதாவைப் பார்த்துதான் தீபக். அவ கண்ணை ரெண்டு செகண்ட் தொடர்ந்து பார்த்ததே ஐஸ்கிரீம் சாப்பிட்ட மாதிரி ஜில்லுன்னு ஆய்டுச்சிப்பா.''

''ஸோ? தீர்மானிச்சிட்டே.''

''தீர்மானிக்க வைக்குதுப்பா அவ அழகு.''



என்ற ஷியாம் சட்டென்று நாயைக் கீழே இறக்கி, அவசரமாகக் காருக்குள் அமர்ந்து கொண்டான், ''அதோ பாரு, அவங்க இந்தப் பக்கம்தான் வர்றாங்க.''

சாலையை நோக்கி நடந்த வினோத்குமாரையும், நிவிதாவையும் இவர்கள் இருந்த இடத்தைக் கடந்து போகும் வரை சுவாரசியமாகப் பார்த்தான் தீபக்.

இருவரும் கைகளைக் கோத்துக் கொண்டு நடப்பதைச் சுட்டிக் காட்டின அவன், ''ஷியாம். நிச்சயமா அவன் அவளோட லவ்வர்தான். அதாவது கதாநாயகன்'' என்றான்.

''இல்லை. எனக்கு வில்லன். புறப்படட்டுமா தீபக்?''

''அப்புறம்? நிவிதா ப்ராஜக்ட்னு ஃபைலை போட்டுடப் போறியா?''

''யெஸ். டபுள் யெஸ்.''

''இருப்பா. அவசரப்படாதே. ஒரு காரியம் செய்யி. அந்தப் பையன் யாரு, அவளுக்கும் அவனுக்கும் என்ன உறவு, உண்மையா நேசிக்கிறாங்களா, இதெல்லாம் தெரிஞ்சுக்க.''

''எதுக்கு?''

''ஏற்கெனவே ஒருத்தனை மனசார நேசிச்சிக்கிட்டிருக்கிற பொண்ணோட வாழ்க்கையில எதுக்காகப் பிரச்னை பண்ணிக்கிட்டு? பாவம்! ஜெயா கேஸ் வேற, அவ இதயத்தைக் காலியா துடைச்சி வச்சிருந்தா. நீ போய் உக்கார்ந்தே. பேசி மயக்கினே. பரிசு, பரிசா வாங்கிக் கொடுத்தே மயக்கினே. ஆடம்பரமான வாழ்க்கையோட வசதிகளைக் கனவு மட்டும் கண்டுகிட்டிருந்தவளுக்குக் கொஞ்சம் கொஞ்சமா ருசி காட்டி உன் பின்னாடி அலைய வச்சே. திகட்டத் திகட்ட அனுபவிச்சிட்டு டாட்டா காமிச்சுட்டே. வீட்ல ஆண்கள் இல்லை – வந்து உன்னை நியாயம் கேட்க. மானம் போயிடுமேன்னு அவளும் அழுகை ஆயுதத்தைத் தவிர வேற எதையுமே உனக்கெதிராப் பயன்படுத்தத்



தெரியாம ஒதுங்கிட்டா. எல்லாரையும் ஒரே தராசுல நிறுத்திப் பார்க்கிறது தப்பு ஷியாம்.''

ஷியாம் பதில் சொல்லாமல் புன்னகை செய்தான். சிகரெட்டை வெளியே எறிந்தான். ''கமின் ப்ரியா'' என்று கதவைத் திறக்க... பாய்ந்த நாயை அருகே உட்கார வைத்துவிட்டு, ''நான் உன்கிட்டே சொன்னதுதான் தப்பு'' என்றான்.

''ஏன்?''

''பின்னே என்ன? ஏதாச்சும் உருப்படியா ஐடியா தருவேன்னு பார்த்தா, திடீர்னு தலைக்குப் பின்னாடி ஒளி வட்டம் முளைச்சமாதிரி அறிவுரையிலே ஆரம்பிச்சிட்டே.''

''இல்லே ஷியாம், நான் உன்னோட நன்மைக்காகத்தான் சொன்னேன். ஒரு பெரிய கம்பெனியோட ரீஜனல் மேனேஜர் நீ. சிடில உனக்குன்னு தனி ஸ்டேட்டஸ் இருக்கு. இமேஜ் இருக்கு.''

''அதெல்லாம் பாதிக்கப்படாமலேயே நாசூக்கா காரியம் முடிக்கிறத்துக்கான திறமையும் இருக்கு. மாஸ்டர் ஆஃப் பிஸ்னெஸ் மேனேஜ்மெண்ட் கண்ணு. சும்மா இல்லே. ஒரு பெரிய வியாபார நிறுவனத்தை நிர்வகிக்க... எவ்வளவு தகிடுதத்தம் செய்யணும் தெரியுமா? எவ்வளவு பெரிய பிஸ்னெஸ் டீல்களை எல்லாம் என் வழிக்குக் கொண்டு வந்திருக்கேன் தெரியுமா? ஒரு பொண்ணு — அதுவும் எனக்குக் கீழே வேலை பார்க்கிற ஒரு பொண்ணு — அதுவும் ஹாஸ்டல்ல தங்கியிருக்கிற பொண்ணு — இவளை வளைக்க முடியலேன்னா ஐ யாம் ஃபிட் ஃபார் நத்திங். தீபக், இதுன்னு இல்லே, எந்தக் காரியமா இருந்தாலும், அவசரம் காட்டாம, நிதானமா, திறமையா, திட்டம் போட்டு நடத்தினா, சாதிச்சுடலாம். எனக்கு அவசரமே இல்லேடா. பார்த்ததிலேர்ந்து மனசு தவிக்குது. அந்தத் தவிப்பை அடக்கியாகணும். நிவிதா எனக்கு வேணும். கொஞ்ச நேரத்துக்கு வேணும். அது நாளைக்கே நடந்தாகணும்னு அவசியமே இல்லே. பொறுமையா நடத்திக் காட்றேன் பாரு. முதல் கேள்வி. நிவிதா எப்படிப்பட்ட பொண்ணு? இதுக்கு விடை நாளைக்குச் சாயங்காலம் உனக்குச் சொல்றேன். வரட்டுமா?''

ஷியாம் தன் காரை ஸ்டார்ட் செய்து, டேப்பைப் போட்டுக் கொண்டு புறப்பட்டுச் சென்றதும், ஒரு பெருமூச்சை வெளியேற்றி, தோள்களைக் குலுக்கிக் கொண்டு, தன் காரில் அமர்ந்தான் தீபக்.

**பை**க் சீராக ஓடிக் கொண்டிருந்தது.

''எனக்கு பிரமோஷன் தந்தா வேணாம்னு சொல்றதா இருக்கேன்'' என்றான் விநோத் ஓட்டிக் கொண்டே பின்னால் திரும்பிப் பார்த்து.

**இந்தக் கதையைத் தொடர்ந்து படித்து வருபவர்களுக்கு ஆயிரம் ரூபாய் பரிசு பெறும் வாய்ப்பிருக்கிறது.**



கைதி 1: ''ஜெயில்ல கல் உடைச்சதுக்காகக் கூடுதலா ரெண்டு வருஷம் தண்டனை கிடைச்சதுன்னு சொல்றியே, எப்படி?''

கைதி 2: ''நான் உடைச்சது ஜெயில் சுவத்துக் கல்லு.''

— சேத்தூர் அன்பழகன்.

''அய்யோ! அங்க பார்த்து ஓட்டுங்க. ஏன் அப்படி?'' என்றாள் நிவிதா.

''பிரமோஷன்னா என் பைக்கைப் புடுங்கிக்கிட்டு, கார் கொடுத்துடுவாங்க கம்பெனில''

''அதனால என்ன? வசதிதானே?''

''எப்படி வசதி? கார்ல இது மாதிரி இடுப்புல கை போட்டு அணைச்சிக்கிட்டு நீ வருவியா?''

''ச்சீ'' என்று கையை எடுத்துக் கொண்டாள்.

''சொன்னது தப்பாப் போச்சா? சரி. இப்ப ஹாஸ்டலுக்குப் போறதுக்கு முன்னாடி ஹோட்டல் போய் லேட்டா டிஃபன் சாப்பிட்டுட்டு...''

''இல்லே. இப்பவே நேரமாச்சு. நான் ஹாஸ்டல்ல சாப்பிட்டுக்கறேன்.''

கொஞ்ச நேரத்தில் நிவிதாவின் வற்புறுத்தலின்படி ஹாஸ்டல் வாசலில் நிறுத்தாமல் தாண்டிச் சென்று சற்றுத் தூரத்தில் நிறுத்தினான். இறங்கிக் கொண்டாள்.

''சொன்னதெல்லாம் நினைவிருக்கா? ரொம்ப அவசியப்பட்டாலேயொழிய நீங்களா எனக்கு ஹாஸ்டலுக்கோ, ஆபீசுக்கோ போன் செய்யக் கூடாது. நீங்க ஊர்ல இருக்கிற நாட்கள்ல ஒரு நாள் விட்டு ஒரு நாள் நானே போன் செஞ்சுப் பேசுவேன். அப்புறம்... அடிக்கடி சந்திக்கிற வேலையெல்லாம் கிடையாது. அந்த புரோக்ராமுக்கு டிக்கெட் வாங்கிட்டேன், இந்த புரோக்ராமுக்கு டிக்கெட் வாங்கிட்டேன்னு என்னைக் கேக்காம நீங்களா முடிவு செஞ்சிட்டுக் கூப்பிடக் கூடாது. என்னைக்குச் சந்திக்கிறோம்ங்கிறதை நான்தான் முடிவு செய்வேன். வரட்டுமா?"

''இவ்வளவு கண்டிஷன்களோட எனக்கு இப்படி ஒரு காதல் தேவைதானா? என்கிட்டே இருக்கிற உன் ஃபோட்டோவுக்கு முத்தம் கொடுக்கிறதா இருந்தாலும் பர்மிஷன் கேட்டுக்கணுமா?''

''வேணாம்'' என்று சிரித்து, ''குட் நைட்'' சொல்லி நடந்து தன் ஹாஸ்டலுக்குள் வந்து அறைக்குள் நுழைந்த நிவிதாவின் முகத்துக்கு நேரே செலஃபன் காகிதத்தில் சுற்றின ஒரு பூங்கொத்தை நீட்டினாள் தாமரைச் செல்வி.

''உனக்கு யாரோ அனுப்பியிருக்காங்க நிவிதா!''

வாங்கி அதிலிருந்த சீட்டில் எழுதியிருந்ததைப் படித்தாள்.

'நிவிதா, உன் வருகையால் சென்னையே அழகானது. வருக, வருக.' என்று இருந்தது. அனுப்பியவர் பெயர் இல்லே.

(தொடரும்)

# இழப்பு

கவிநிலா வீட்டிலிருந்து பள்ளிக்கூடம் சற்றுத் தொலைவில் இருந்தது. அரசு பேருந்துகள் அவளது பள்ளி நேரத்துக்குச் சரியாக வருவதில்லை. எனவே தினமும் அவள் அவளது பள்ளிக்குச் செல்லத் தனியார் பேருந்தை நம்ப வேண்டியிருந்தது. சில நாட்களில் எவ்வளவு விரைவாகக் கிளம்பினாலும் அதையும் விட்டு விட்டு நடந்து செல்வாள். அப்படிச் சென்றபோதுதான் தெரு முனை ஒன்றில் அந்தப் பெரியவரைப் பார்த்தாள். அவருக்கு முழங்காலுக்குக் கீழ் இரண்டு கால்களும் இல்லை. ஆனால் மலர்ந்த முகத்துடன், அமர்ந்து வருவோர் போவோரிடம் சில்லறை வாங்கிக் கொண்டு காலணிகளை மெருகேற்றினார். அவரது கம்பீரமான தோற்றம் அவளை வெகுவாகக் கவர்ந்தது. தூய வெள்ளையில் சட்டையும், வேட்டியும் அணிந்திருந்தார். இந்த மாதிரியான வேலை செய்பவர்கள் பொதுவாக அழுக்கடைந்த உடைகளுடன் இருப்பதை அவள் கவனித்திருக்கிறாள். ஆனால் இவர் வெகு சுத்தமாகக் காட்சியளித்தார். வேகமாக நடந்தவள் அவரை எடைபோட்டுக் கொண்டே தயங்கியவாறு சென்றாள். மெருகேற்றக் காலணிகள் இல்லாத போது அருகிலிருந்த புத்தகத்தை எடுத்துப் படித்துக் கொண்டிருந்தவாறு இருந்தார். அவளை இச்செய்கை மேன்மேலும் ஆச்சரியப்பட வைத்தது.

கவிநிலா மூன்றாம் வகுப்பிலிருந்து நாலாம் வகுப்புக்குச் சென்றாள். காலணிகளுக்கு மெருகேற்றிக் கொண்டிருந்தவர் அதற்குள் பழைய காலணிகளைப் புதுப்பித்து விற்க ஆரம்பித்தார். அவருடன் பேச வேண்டும், பழக வேண்டும் என்ற அவளது ஆர்வம் அதிகரித்தது. எனவே அடுத்த முறை அம்மாவிடம் சொல்லி, அவரிடமே காலணி வாங்க வேண்டும் என்று தனக்குள் முடிவு செய்தாள். இதற்காகவே நாள்தோறும் பேருந்து செலவுக்கென்று அப்பா கொடுத்த காசை மிச்சப்படுத்தி, பள்ளிக்கு நடந்தே போனாள். அந்தப் பெரியவரைக் கண்டால் அவளது முகம் மலரும். அவரும் பதிலுக்குப் புன்னகை செய்யும் அளவுக்குப் பரிச்சயமானார்.

ஒரு ஞாயிற்றுக் கிழமை மாலை அவள் தன் பெற்றோருடன் அந்தத் தெரு முனையை அடைந்தாள். அவர் அமருமிடத்தில் ஒரே கூட்டமாக இருந்தது. விசாரித்தபோது, அந்தப் பெரியவர் மீது ஆட்டோ ஒன்று மோதி விட்டதாகவும் அவரது கைகளில் ஒன்று மட்டும் கடுமையாகத் தாக்கப்பட்டிருப்பதாகவும் அறிந்தனர். தாக்குதலால் பாதிக்கப்பட்ட கையை அநேகமாக எடுத்து விடுவார்கள் என்றும் பேசிக் கொண்டனர். இரண்டு கால்களும் ஆரோக்கியமாக உள்ளவர்களே விபத்து நேரும் போது ஓடித் தப்பிக்க முடிவதில்லை. இரண்டு கால்களையும் இழந்த அவர் என்ன செய்திருக்க முடியும்? நினைக்கும் போதே கவிநிலாவுக்கு அழுகை வந்தது.

அவர் ஒரு விடுதலைப் போராட்ட வீரர். பின்பு இராணுவத்தில் பணியாற்றிய போது இரண்டு கால்களையும் இழந்தவர். தேசபக்தி மிக்கவர். ஆனால் விடுதலைப் போராட்ட வீரர்களுக்கு அரசு அளிக்கும் மாதாந்திர ஊதியத் தொகைக்கு அவர் மனுச் செய்து கொள்ளவில்லை! அவருக்குத் திருமணம் ஆகவில்லை. கால்களை இழந்த நிலையில் அவர் அதைப் பற்றி நினைக்கவில்லை. அடிக்கடி, தனது பெற்றோருடன் மருத்துவமனை சென்று பார்த்ததில் அவரைப் பற்றிப் பிறர் சொல்லக் கேட்ட செய்திகள் இவை.

அரையாண்டு விடுமுறை முடிந்து, கவிநிலா பள்ளிக்குச் சென்ற போது, ஆவலாக அந்த இடத்தைப் பார்த்தாள். இடது கையினால் ஒருவருடைய காலணிக்கு மெருகேற்றிக் கொண்டு இயல்பாக உட்கார்ந்திருந்தார் அந்தப் பெரியவர். அவருடைய சிரித்த முகத்தைப் பார்க்க அவளுக்கு ஆறுதலாக இருந்தது. வலது கைப்பக்கம் சட்டை தொளதொளவென்று தொங்கியது. ஆனால் அவரது முகத்தில் இழப்பிற்கான அறிகுறியே இல்லை. உற்சாகமாகச் செயல்பட்டுக் கொண்டிருந்தார். அவள் அவர் அருகில் சென்று

''வணக்கம் மாமா'' என்றாள் நிறைவுடன். அவரது தன்னம்பிக்கை அச்சிறு மலருக்கு இதமாக இருந்தது.

''வாம்மா உன்னைத்தான் எதிர்பார்த்திருந்தேன்'' என்றவர் அன்புடன் அவளைப் பார்த்தார். இரண்டு கைகளாலும் அவளை அணைக்க முயன்றவர், தனக்கு வலது கை இல்லாத நிலையைச் சட்டென்று உணர்ந்தவராக, முதன் முறையாகக் கலங்கினார். பள்ளிக்குத் தாமதமாகிவிட்டதை உணராமல் அவளும் அழுதாள்.



—நாகை கவின்—

# நிற்க நிழல் வேண்டும்

28

பிரபு பார்வையை விமானத்துக்கு வெளியே பதித்தான். பொறுக்கி எடுத்த பத்தே பயணிகளிடையே உள்ளே இருந்த இறுக்கமான மௌனத்தில் சோகம் தொக்கி நின்றது. சாதாரண சோகமில்லை இது. சங்கிலித் தொடராய் இன்னும் பல ஜன்மங்களுக்குத் தொடரப் போகும் ஊழ்வினை இது...

நினைக்க நினைக்க நம்ப முடியாத அதிர்ச்சி அலைகள் புதிய உத்வேகத்துடன் தாக்க, பிரபு, முகத்தை இரு கைகளிலும் புதைத்துக் கொண்டான். கடந்த இரண்டு மாத அனுபவத்தில் முப்பது வருஷ மூப்பு மனத்தில் ஏறியிருந்தது. இனி, நினைத்தாற்போல் கண்டத்திலிருந்து பாட்டு பிறக்காது. ஹாஸ்ய உணர்வில் அதரங்களிலும் கண்களிலும் சிரிப்பு மலராது. சிரிப்பே மறைந்து போயிற்று. அதை யாருடைய சமாதியிலோ காணிக்கை ஆக்கிவிட்டாற் போல —

மூடிய கண்ணுக்குள், கை புதைந்த இருளுக்குள், தெரிந்தவரும் தெரியாதவரும், யாழ்ப்பாணத் தமிழரும் சிங்களவரும், முஸ்லிம் தமிழரும் இந்தியப் படை வீரர்களும் திசை புரியாமல் முன்னும் பின்னும் ஓடினார்கள். விளங்காத காரணங்களுக்காக மாண்டார்கள். விதியின் சதிக்குழியில் இழுக்கப்பட்டது போல் புதைந்து போனார்கள்.

"ஓ, கடவுளே!" என்று அவன் வாய் விட்டு அரற்றினான். எப்படி நிலைமை தலைகீழாக மாறிவிட்டது! யாரைக் காரணம் சொல்வது இதற்கெல்லாம்! ஏதோ ஓர் அமானுஷ்ய சக்தியின் பழி வாங்கல் என்பதை நம்ப முடிந்தால் எத்தனை சௌகர்யமாக இருக்கும்!

யாழ்ப்பாணத்தில் கால் வைத்த நேரத்திலிருந்தே எல்லாம் தலைகீழாகப் போய்விட்டது. வந்து இறங்கிய ஒரு மணி நேரத்துக்குள் சிலியா அவனிடமிருந்து கழன்று கொண்டது கொஞ்ச நாட்களுக்கு ஜீரணிக்க முடியாததாக இருந்தது. தானாக ஹோட்டலுக்குத் திரும்பி விடுவாள் என்று அவன் காத்திருந்தது முட்டாள்தனம் என்று பிறகு மெல்லப் புரிந்தது. ஜயசிலனைக் கண்டுபிடித்ததும் இருவரும் தலைமறைவாகியிருக்க வேண்டும். அவர்களை மிக எளிமையாகச் சேர்த்து வைத்துப் பார்த்துப் பெருமையைக் கட்டிக் கொள்ளலாம் என்று சாதாரணமாக நினைத்தது அவனுடைய முட்டாள்தனம்.

இரண்டு நாட்கள் அவன் யாழ்ப்பாணத்தில் அலைந்தான், விஷயங்களைச் சேகரிக்க.



இந்திய அமைதி காக்கும் படைக்கு எத்தனை தொந்தரவு கொடுக்க முடியுமோ அத்தனை தொந்தரவு கொடுத்துக் கொண்டிருந்தார்கள் புலிகள். உண்ணாவிரதத்தில் உயிர்த்தியாகம் செய்த இளைஞனின் நினைவுக்கும், அவர்களது உணர்ச்சியைத் தூண்டும் மொழிக்கும் ஜனங்களிடையே வலுவான பாதிப்பை ஏற்படுத்தும் சக்தியிருப்பதை நன்ருக உணர்ந்து கொள்ள முடிந்தது. போராளிகளின் வாதம் நியாயமோ நியாயத்துக்குப் புறம்பானதோ, அவர்கள் அவர்களது இனத்தைச் சேர்ந்தவர்கள். அநேகமாக ஒவ்வொரு குடும்பத்திலும் எவனாவது சுற்றி வளைத்தாவது ஏதோ ஒரு பழக்கத்தில் அந்தக் கும்பலுடன் உறவு வைத்திருப்பவன். இந்தியப் படை வரும் வரையில் தனக்குத் தெரிந்த வகையில் சிங்கள எதிரியுடன் சண்டையிட்டுத் தமிழனின் மானத்தைக் காப்பாற்றியவன். இந்தியப் படை என்ன இருந்தாலும் அந்நியப் படை!

இப்படிப்பட்ட மனநிலைதான் சாதாரண மக்களுக்கு இருக்கும் என்று பிரபு நினைத்துக் கொண்டான். ஜனங்களிடையே ஏற்பட்டு வரும் மாறுதலுக்கு வேறு விதமாக அவனுக்கு விளக்கம் தெரியவில்லை. பாமரர்களுக்கு நடுவே ஊடுருவியிருக்கும் போராளிகளை இனம் கண்டுபிடிக்க முடியாமல் இந்தியப் படை தடுமாறிற்று.

இத்தனை கூத்திற்கும் நடுவில் இடைக்கால நிர்வாக அமைப்பின் பிரதிநிதித்துவத்தைப் பற்றிய பேரமும் நடந்து கொண்டிருந்தது. அவனுக்கு அலுத்துப் போயிற்று.

''என்னய்யா பத்திக்கொலாவா, திரிகோணமலை போறியா?'' என்று இந்திய அமைதிப் படையைச் சேர்ந்த மேஜர் நரசிம்மன் கேட்ட போது 'ரெடி' என்று கிளம்பினான். திரிகோணமலைக்குப் போய்ச் சேர்ந்ததும் மனம் இன்னும் சோர்ந்து போயிற்று. திரிகோணமலையிலிருந்து கச்சுவேலிக் கரையோரம் முழுவதும் இரண்டாம் மகாயுத்தத்தின் காட்சி போல் இருந்தது. இயற்கை எழில் மிகுந்த அந்தக் கடற்கரையில் நின்று அவன் மனிதனின் 'கைங்கர்யத்தை'ப் படமெடுத்துக் கொள்ளும் போது ஓர் இளைஞன் வந்து வ்ப்ரேமுக்குள் நின்ருன்.

''இந்த ஊர்க்காரரா நீங்க?'' என்ருன் பிரபு தமிழில்.

''நான் சிங்களவன்!'' என்ருன் அவன் அரைகுறை ஆங்கிலத்தில். ''நீங்கள் இந்தியப் பத்திரிகைக்காரரா?''

''ஆமாம்!''

சுரீரென்ற கோபத்துடன் அவன் பிரபுவைப் பார்த்தான்.

''சீன விரிகுடாவில் இங்கேயிருந்து துரத்தப்பட்ட சிங்கள அகதிகள் எத்தனை பேர் இருக்கிருர்கள் என்று உங்களுக்குத் தெரியுமா? ஒப்பந்தத்துக்குப் பிறகும் புலிகள் பயமுறுத்தும், பயமுறுத்தலினால் சிங்களவர்கள் தங்கள் கிராமங்களுக்குத் திரும்ப முடியவில்லை என்று தெரியுமா? நாங்கள் என்ன தவறு செய்தோம்?''

அந்த இளைஞனின் பயம் எத்தனை உண்மையானது என்று மறுநாள் அவன் பத்திக்கோலாவுக்குச் சென்ற போது பயங்கர பிரத்யட்சமாகத் தெரிந்தது. ஏராள சிங்களவர்கள் கொல்லப்பட்டிருந்த காட்சியைக் காண நேர்ந்தது. அடிவயிற்றிலிருந்து புறப்பட்ட குமட்டலை அடக்கிக் கொண்டு அவன் புகைப்படம் எடுத்தான். மூளை ஸ்தம்பித்த நிலையில் நெஞ்சு 'கடவுளே கடவுளே' என்று அரற்றிற்று. கசாப்புக் கடைக்காரன் கூட இன்னும் மனிதாபிமானத்தோடு வெட்டுவான். இந்த அரக்கத்தனத்துக்கு ஏது விளக்கம்?

மூடிக்கிடந்த கடைத் தெருவில் அவன் மிகுந்த சோர்வுடன் நடக்கையில் ஒரே ஒரு வாசல் திறந்திருந்தது. 'அமைதி, விடுதலை, ஜனநாயகம்' என்று ஒரு பலகை மேலே தொங்கிற்று. அவன் உள்ளே நுழைந்தான். சற்றும் எதிர்பாராமல் அங்கே ஈசுவரன் அமர்ந்திருந்தான். அன்று இருந்த மனநிலையில் ஓர் ஆச்சரியப் புன்னகையைக் கூட உதிர்க்க முடியவில்லை.

''என்ன ஈசுவரன் இது?'' என்று அவனை அங்கே எதிர்பார்த்திருந்தது போல் துக்கம் விசாரிக்கத்தான் முடிந்தது.

ஈசுவரன் தலையை அசைத்து இரண்டு கைகளையும் மேலே தூக்கி ஆயாசத்துடன் இறக்கினான்.

''பயங்கரவாதமே தனது ஆயுதமாகக் கொண்டுள்ள இயக்கம் வேறு எப்படி நடந்து கொள்ளும்?''

''ஆனாலும் இப்படியா? தமிழர் பண்பாடுன்னு ஒரு பக்கம் வாய் கிழியப் பேசிக்கிட்டு இவங்கள்ளாம் எந்த கலாசாரத்துப் பிரதிநிதிகள் ஈசுவரன்?''

ஈசுவரன் எதிர்பாராமல் சிரித்தான். ''நாங்கள் எல்லாரும் முகமிழந்து போனவர்கள் எண்டு நா கதைக்க இல்லே? மகாபாரதம் படிச்சதில்லேயா? பாரத யுத்தம் நடந்த பிறகு என்ன ஆச்சு? யாதவர்கள் தங்களைத் தாங்களே அழித்துக் கொண்டு சாகல்லே? அவர்கள் எந்த கலாசாரத்தைச் சேர்ந்தவர்கள்?''

பிரபு சற்று நேரம் அந்த வற்றிய முகத்தைத் துயரத்துடன் பார்த்தான்.

''சரி இந்தச் சுடுகாட்டிலே நீங்க என்ன செய்யறீங்க?''

ஈசுவரன் மீண்டும் சிரித்தான். ''யாரை யாவது உயிர்ப்பிக்க முடியுமா எண்டு பார்க்கறேன். புனருத்தாரண வேலையை ஆரம்பிச்சிருக்கோம். முஸ்லிம் தமிழர்களிடையேயும் சிங்களவர்களிடையேயும் நம்பிக்கையை வளர்க்க முயற்சி செய்யறோம். நாங்கள் சாண் ஏறினால் முழம் சறுக்க வைக்கிருர்கள் பயங்கரவாதிகள்.''

''இதுக்கெல்லாம் ஏதோ அர்த்தம் இருக்கணும் ஈசுவரன்!''

ஈசுவரன் பெருமூச்சு விட்டான்.

வாஸந்தி

அவன்: ஆச்சரியம்தான், ரொம்பத் தங்கமான பொண்ணுன்னு உன் மாமியார் உன்னைப் புகழுறாளே...?

இவன்: பின்னே, அறுபது பவுன் நகையைச் சுமந்துக்கிட்டு வந்தவளாச்சே, நான்!

— உ. ராஜாஜி.

''எங்களுடைய அனுமானத்தைக் கதைக்கிறேன். வெளிநாட்டு உதவி ஏதோ புதுசாக் கிடைச்சிருக்கணும்.''

''என்ன கிடைச்சிருந்தாலும் இது என்ன பைத்தியக்காரத்தனமான வெறியாட்டம் ஈசுவரன்? வடக்கும் கிழக்கும் இணையணும் என்கிற விருப்பம் இருக்கும் போது இங்கிருக்கிற ஜனங்களுடைய ஆதரவு வேண்டாமா? இப்ப ஆதரவு எப்படிக் கிடைக்கும்? யாழ்ப்பாணத் தமிழனுக்குத் தமிழ்நாடு ஆதரவு கொடுத்த மாதிரி இங்கிருக்கிற முஸ்லிம்களுக்கு முஸ்லிம் நாடுகள் ஆதரவு கொடுக்காதுன்னு என்ன நிச்சயம்? மொழியை விட மதம்தான் முக்கியம் அவங்களுக்கு. அப்புறம் ஏற்கெனவே ஜே.வி.பி. ஏக அமர்க்களம் செய்துக்கிட்டிருக்கு. இத்தனை சிங்களவங்களை வெட்டிப் போட்டிருக்கிறதைப் பார்த்துச் சும்மா இருக்குமா?''

ஈசுவரன் ஒரு சிகரெட்டைப் பிரபுவுக்கு நீட்டி, தானும் ஒன்று எடுத்துப் பற்ற வைத்து, விட்டத்தைப் பார்த்துப் புகையை ஊதினான்.

''இந்த க்ரூப் கதைக்கிறபடிதானே உங்களை கமிஷனர் ஆட்டுறார்?'' என்றான் வெறுப்புடன்.

''இடைக்கால நிர்வாக அமைப்பிலே பன்னிரண்டு அங்கத்தினர்கள்லே அவர்கள் ஏழு பேர். மற்ற எந்தக் கும்பலுக்கும் இடமில்லே. இவ்வளவு முக்கியத்துவம் இந்த ஃபாஸிஸ எதேச்சாதிகாரக் கும்பலுக்குக் கொடுக்கப்படுவதன் விளைவு பயங்கரமானதா இருக்கப் போகிறது. ஒரு விஷயம் உங்களுக்கெல்லாம் விளங்க இல்லே. நிலைமை ஜயவர்த்தனவுக்குச் சாதகமாகிப் போகும். உடன்படிக்கையைச் செயலாக்காம காலங்கடத்தப் போறார். என் வரையிலே உடன்படிக்கை இப்பவே தோற்றுப் போச்சு.''

தமிழ் நாடு அரசின் ஒத்துழைப்பும் ஆதரவும் வேண்டும் என்கிற காரணத்துக்காகவே அதனுடைய செல்லப் பிள்ளையான இந்தக் கும்பலுக்குப் பிரத்தியேக முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது என்று இவனிடம் எப்படிச் சொல்வது என்கிற சங்கடத்துடன், அவனுடைய தோளைத் தட்டி ''நாளைக்குச் சந்திக்கலாம்'' என்று பிரபு கிளம்பினான்.

**ஊ**ரடங்கு சட்டத்தின் நடுவில் அவன் அங்கு சந்தித்த அநேகம் முஸ்லிம் தமிழர்கள் தமிழர் பிரச்னையுடன் சம்பந்தப்படுத்திக் கொள்ளாமல் பேசினார்கள். சிங்களவருடன் ஒத்துப் போவதுதான் அவர்கள் வரையில் லாபம் என்று அவர்கள் நினைத்தால் அதில் ஆச்சரியமில்லை என்று தோன்றிற்று. அப்பாவி ஜனங்களைப் படுகொலை செய்யும் பயங்கரவாத கும்பல்கள் பதவிக்கு வந்தால் இவர்களுடைய ஒத்துழைப்பு கிட்டுமா?

அன்று மாலை ஈசுவரன் அதிக சோர்வுடன் தெரிந்தான்.

''என்னுடைய ஊகம் சரிதான்'' என்றான்.

''என்ன ஊகம்?''

''இந்த உடன்படிக்கை வெற்றியடையக் கூடாது என்று நினைக்கிற வெளி சக்தியின் ஆதரவு அவன்களுக்கு இருக்கு என்கிற ஊகம்!''

''எப்படிச் சொல்றீங்க?''

''செய்தி கேட்கல்லியா? இடைக்கால நிர்வாக அமைப்புக்கு இவன்கள் கொடுத்த லிஸ்டிலிருந்து ஜனாதிபதி அங்கீகரிச்சு ஒரு பட்டியல் கொடுத்தார். அது இவன்களுக்குச் சரிப்படாதாம். நிராகரித்து விட்டார்கள்!''

''ஐயய்யோ!'' என்றான் பிரபு அதிர்ந்து. ''இவங்க கொடுத்த லிஸ்ட்தானே?''

''ஓம். ஆனா இவர்கள் கொடுத்த வரிசைப்படி இல்லையாம். கிழக்குப் பகுதிக்குப் பிரதிநிதியா அவங்க கொடுத்த லிஸ்டிலே இருக்கிற ஆளைப் போடணுமாம். இப்பப் போட்டிருக்கிற ஆள் கூடாதாம்.''

''ஏன் அந்த ஆளும் இவங்க லிஸ்டிலே இருந்தவர்தானே?''

''ஓம்''

''பின்னே, இப்ப எப்படி மறுக்க முடியும்? அந்த ஆள் வேண்டாம்னு லிஸ்டிலே ஏன் சேர்த்தாங்க?''

ஈசுவரன் பதில் சொல்லாமல் சிரித்தான்.

''சரியான பைத்தியக்காரங்கய்யா!'' என்றான் பிரபு கோபத்துடன். ''இப்படிப்பட்ட ஒரு சந்தர்ப்பத்தை யாராவது நழுவ விடுவாங்களா? இதென்ன வீட்டுக்குள்ளே நடக்கற சண்டையா? உங்க ஜனாதிபதிக்கு இருக்கிற நிர்ப்பந்தங்களிலே இன்னும் தழைஞ்சு வருவாரா?''

''இனிமே இறங்க முடியாதுன்னு சொல்லியாச்சு. ஏற்பாட்டுக்கு ஒத்துவரல்லேன்னா நிர்வாக அமைப்பே இருக்காதாம்.''

பிரபு திகைப்புடன் அவனைப் பார்த்தான். ஈசுவரனின் அதரங்களில் இன்னும் சிரிப்பு இருந்தது.

''இதெல்லாம் வெளி சக்தியுடைய தூண்டுதல்னு சொல்லலேங்கிறீங்க!''

''எனக்கு வேற எந்த விளக்கமும் கதைக்கத் தோண இல்லே பிரபு!''

''நா சொல்றேன்!'' என்றான் பிரபு ஆத்திரத்துடன். ''இது நன்றிகெட்டத்தனம்! சமாதானத்துக்கு அரசியல் ரீதியா வழி பண்ணி, சொந்த நிலத்தை நிர்வாகம் செய்யச் சந்தர்ப்பமும் ஏற்படுத்தி — எல்லாம் காலால எட்டி உதைக்கவா? இனிமே இவர்களை எவன் மதிப்பான்?'' யாரோ தன்னையே அவமானப்படுத்தியது போன்ற உணர்வுடன் பிரபு வெளியேறினான்.

அன்று முழுவதும் நினைக்க நினைக்க ஆறவில்லை. 'முட்டாள்கள் முட்டாள்கள்' என்று அடிமனத்தில் சபிக்கையில், ஒப்பந்தம் ஆனவுடனேயே கொழும்பில் ஈசுவரன் கிளப்பிவிட்ட சந்தேகங்கள் உண்மையாகிப் போயிற்றே என்று ஆத்திரம் வந்தது. அவன்

இப்பொழுது சொல்லும் காரணமும் திட்ட வட்டமாக நிரூபிக்க முடியாவிட்டாலும் உண்மையாக இருக்கலாம்.

மறுநாள் மதியம் யாழ்ப்பாணத்துக்கு விமானம் புறப்படுவதாக அவனுக்குத் தகவல் வந்ததும் சுகவரனிடம் சொல்லிக் கொள்ளக் கூட மனசில்லாமல் கிளம்பிப் போனான்.

ஹோட்டலை அடைந்த போது முதலாளி உற்சாகமில்லாமல் வரவேற்றார்.

"நீங்க வந்தா இந்த விலாசத்திலே தொடர்பு கொள்ளணும்னு யாரோ கொடுத்துட்டுப் போனாங்க. பெயர் சொல்லல்லே" என்று அவர் ஒரு சின்னச் சீட்டைக் கொடுத்தார்.

சீலியாவின் கையெழுத்து என்று கவனித்து அதை மடித்து, பாக்கெட்டில் போட்டான். சாமான்களை அறையில் வைத்த கையுடன் வெளியே கிளம்பினான்.

தெருவில் இப்பொழுது அதிக ஜனநடமாட்டமே இல்லை — ஊரடங்குச் சட்டத்திலும். தென்பட்ட ஒன்றிரண்டு பேரும் மிகுந்த எச்சரிக்கையுடன் சென்றார்கள். அவ்வப்பொழுது துப்பாக்கி வெடிச் சத்தம் கேட்டது. எங்கு திரும்பினாலும் இந்திய அமைதிப்படை வீரர்களின் தலை தெரிந்தது. அவன் மிகுந்த பிரயாசையுடன் விலாசத்தைத் தேடிப் பிடித்து ஒரு வீட்டின் கதவைத் தட்டினான். பலமுறை தட்டி, தன் பெயரைச் சொன்ன பிறகே கதவு திறந்தது.

கதவைத் திறந்த சீலியா சடக்கென்று அவனை உள்ளே இழுத்துக் கதவைச் சாத்தினாள்.

"நீங்க என்னை மன்னிக்கணும் பிரபு, உங்ககிட்டே எதையும் கதைக்காம மறைஞ்சு போனதுக்கு!" என்றாள் மெல்ல.

"ஜயசீலனைக் கண்டதும் என்னை மறந்திருப்பீங்க!"

"இல்லே. உங்களிடம் எதையும் விளக்க எனக்கு நேரம் இருக்கல்லே உடனடியாகத் தலைமறைவாக வேண்டியதாய்ப் போச்சு. ஜயசீலனைப் பார்க்கிறதுக்குமுன் அவருடைய விரோதியைத்தான் பார்த்தேன்."

"ஜயசீலனைப் பார்க்கல்லியா?"

"பிறகுதான் பார்த்தேன், என் உறவுக்காரர் வீட்டிலே."

"இப்ப எங்கே அவன்?"

அவள் பதற்றத்துடன் சொன்னாள். "இண்டைக்குக் காலையிலேர்ந்து காணோம் பிரபு."

"காணோமா?" என்றான் பிரபு வியப்புடன்.

அவள் தலையைக் குனிந்தபடி சொன்னாள். "நா இதை எதிர்பார்த்ததுதான். அவருடைய இயக்கத்துக்காரங்கள் கடத்திக் கொண்டு போயிருப்பான்கள். தான் இயக்கத்திலேர்ந்து விலகிட்டதாகவும் புனருத்தாரண வேலையிலே இருக்கப் போகிறதாகவும் ஜயசீலன் தெரிவிச்சார். அவர்களுக்கு அது சம்மதமில்லே. முக்கியமா என்னோடு அவர் கூட்டுச் சேர்றதிலே இஷ்டமில்லே"

"தப்பிச்சுண்டு வர முடியாதா?"



அவள் தலையசைத்து, "கஷ்டம்" என்றாள்.

"அத்தனை சிரமப்பட்டு அலைஞ்சு திரிஞ்சு மறுபடி சந்திச்சதெல்லாம் இதுக்குத்தானா?"

அவள் நிமிர்ந்து துயரத்துடன் புன்னகை புரிந்தாள்.

"ஒரு மாதம் சேர்ந்து வாழ முடிந்ததே! அதுக்கு உங்களுக்கு நன்றி சொல்லணும்."

"நீங்க தனியா என்ன செய்யப் போறீங்க?"

"நான் தனியில்லையே! பெண்கள் இயக்கம் எனக்குத் துணை இருக்கு. பயங்கரவாதத்தை ஆதரிக்கிறது நம்மையே அழித்துக் கொள்கிறதுக்கு ஒப்பானது எண்டு பலமான பிரசாரம் செய்யற வேலை இருக்கு."

"இப்பவும் பயங்கரவாதத்துக்கு மக்கள் ஆதரவு இருக்கா? பயத்தினாலேதானே அப்படி நடந்துக்கறாங்க?"

"அந்த பயத்தைப் போக்கணும்."

அது எப்படிப் போகும் என்கிற குழப்பத்துடன் அவன் விடைபெற்றான்.

அடுத்தடுத்து பயங்கர சமாசாரங்கள் வந்தன. பதினேழு விடுதலைப் புலிகள் கைதானதும், விசாரணைக்குக் கொழும்புக்கு இலங்கை அரசு பிடிவாதமாக அழைத்துச் சென்றதும், ஸயனைடைச் சாப்பிட்டு அவர்களில் பன்னிரண்டு பேர் இறந்ததும் ஜுர வேகத்தோடு தாக்கிய செய்திகள். யாழ்ப்பாணக் காற்றே கொதிக்கும் உலை நீர் போல் இருந்தது. ஹோட்டலை விட்டுத் தலையை நீட்டுவதே ஆபத்து என்கிற நிலையில் பிரபு அறைக்குள் அமர்ந்து ரேடியோ செய்தியைக் கேட்டுக் கொண்டிருந்தான். கைதிகள் கொழும்புக்கு அழைத்துச் செல்லப்பட்டால் பயங்கரப் பின் விளைவுகள் நேரும் என்ற புலிகளின் எச்சரிக்கை நிரூபணமாக ஆரம்பித்து விட்டது. தங்கள் வசம் வைத்திருந்த பன்னிரண்டு சிங்களக் கைதிகளைக் கொலை செய்தார்கள். அதோடு பயங்கர வெறியாட்டம் தொடங்கி விட்டது. அப்பாவி ஜனங்களைத் தாக்கும் வெறியாட்டம். இலங்கை முழுவதும் நடுங்கிற்று. அப்படி நடுங்க வைப்பதுதான் பயங்கரவாதிகளின் குறிக்கோள் என்கிற பிரக்ஞையில் யாழ்ப்பாணம் போர்க்களமாகிப் போனதை அவன் பீதியுடன் கவனித்தான். இப்பொழுது விடுதலைப் புலிகளுக்கும் அமைதி காக்கும் படைக்கும் நேர்முகத் தாக்குதல் ஆரம்பித்து விட்டது. அப்பாவி ஜனங்களை அரணாக வைத்து நடத்திய புலிகளின் தாக்குதலினால் நிறைய சேதம் ஆகிக் கொண்டிருந்தது. மக்களின் அன்றாட வசதிகளுக்காக அமைதி காக்கும் படை எவ்வளவோ பணிகள் செய்தும் ஜனங்களின் பார்வையில் ஒரு கலக்கம் புகுந்து கொண்டிருந்தது. ஹோட்டல் முதலாளி கூடக் குழம்

பிப் போனவர் போல் அவனிடம் பேசுவதையே நிறுத்திக் கொண்டார்.

தானே எதிலோ தோற்றுப் போன மாதிரி இருந்தது அவனுக்கு. அசோக் மெஹ்தா இலங்கைக்குப் போகிறாயா என்று கேட்ட போது இப்படிப்பட்ட உணர்ச்சிக் கொந்தளிப்பில் மாட்டிக் கொள்ளப் போகிறோம் என்று நிச்சயம் அவன் நினைத்திருக்கவில்லை.

அவனுக்கு ஜயசிலனின் வரிகள் அடிக்கடி ஞாபகம் வந்தன.

எனக்கு
அச்சமாயிருக்கிறது
புகை மண்டலம்
தேசிய சின்னமாகவும்
வெடிச் சத்தங்களே
தேசிய கீதமாகவும்
அங்கீகரிக்கப்பட்டு விடுமோ!

அவன் கொழும்புக்குச் செல்லத் தயாராகையில் எதிர்பாராமல் சீலியா அறை வாசலில் நின்றாள் — துயரத்தின் ஓவியமாய். அவன் பீதியுடன் தயங்கிக் கேட்டான்.

''ஜயசிலன், சீலியா...?''

அவள் உதட்டைப் பிதுக்கித் தலையசைத்தாள்.

''சுட்டு விட்டார்கள்!''

''ஓ மை காட்!'' என்று அவன் முகத்தை மூடிக் கொண்டான். கண்களில் மளமளவென்று நீர் நிறைந்தது. சற்று நேரத்துக்கு மூளை ஸ்தம்பித்தது.

அவன் மெதுவாகச் சமாளித்துக் கொண்டு நிமிர்ந்தான்.

''நீங்களும் என்னோடு வந்து விடுங்கள் சீலியா! ஜயசிலன் பயந்த மாதிரியே ஆயிட்டது. விமோசனமே இல்லேன்னு தோணுது''

''நா அப்படி நினைக்கல்லே பிரபு.'' என்றாள் அவள் தீர்க்கமாக. ''இந்த வெறியாட்டம் எல்லாம் நிரந்தர கட்டமாயிருக்க முடியாது. எம் ஜனங்கள் முட்டாள்களில்லே. கண்டிப்பா நிலைமை மாறும்; எனக்கு நம்பிக்கையிருக்கு. அரசியல் தீர்வு வரும்.''

வெளியே வெடிச்சத்தம் விடாமல் கேட்டது. அதீதமான துயரத்தில் இவளுக்கு மூளை கலங்கி விட்டது என்று அவன் நினைத்துக் கொண்டான்.

''என்றால் கொழும்புக்கு வர இயலாது பிரபு. எனக்கு இங்கு வேலை இருக்கு.'' ......

இப்பொழுது கொழும்புக்கு மீண்டும் திரும்பும்போது மகாபாரத காலத்துக்குச் சென்று வந்தது போல் இருந்தது. ஈசுவரனின் நினைவு வந்தது. சீலியாவின் மயக்கங்கள் அவனுக்கும் உண்டு. உயிரோடு இருக்கிறானோ இல்லையோ —

அவனைக் கண்டதும் விஜயபாலசூர்ய தனது வழக்கமான சிரிப்புடன்,

''ஆ, பிரபு வாருங்கள்!'' என்று வரவேற்றார். ''லைப்ரரிக்கு வாருங்கள் விவரமாகப் பேசுவோம்.''

லைப்ரரியில் எதிரும் புதிருமாக வெகு நேரம் மௌனமாக உட்கார்ந்து அவன் கடைசியில் தடுமாற்றத்துடன் சொன்னான்.

''வேடிக்கை, மிஸ்டர் பாலசூர்ய. உங்களிடம் சொல்ல என்னிடம் ஏதும் விஷயமில்லை.''

அவர் முகமெல்லாம் சுருங்கும் சிரிப்புடன் சொன்னார்.

''என்னிடமும் கேட்கக் கேள்விகள் இல்லை.''

இந்தச் சிரிப்பு இவருக்கு மிக அவசியமான கவசம் என்று அவன் நினைத்துக் கொண்டான்.

(முற்றும்)

# நம்பினால் நம்புங்கள் ஜப்பானில் கூட கொசுக்கள் உள்ளன



கொசுக்கள் எங்கேயும்
இருக்கின்றன. எப்பொழுதும்
இருக்கின்றன. பழைய
தலைமுறைக்கான கொசு
விரட்டிகள் இந்த கொசுக்களை
ஒழிக்க இனி ஒருபோதும் உதவப்
போவதில்லை.

ஆனால் அதிர்ஷ்டவசமாய்
கொசுக்களை ஒழிக்க ஒரு புதிய
ஜப்பானிய வழிமுறை ஒன்றுள்ளது.

## SLEEP-WEL

**Made under Japanese Technique**

Beware of duplicates

**9, மேட்டுகள் இலவசம்
ஒவ்வொரு ஸ்லீப்வெல்
ஹீட்டருடன்**



விநியோகஸ்தர்
சாய் எண்டர்பிரைஸஸ்
13, பாலாஜி நகர் முதல் மாடி
இரண்டாவது தெரு,
ராயப்பேட்டை, சென்னை -14
தொ.பே.: 849924

தயாரிப்பாளர் :
ஸில்வர் ஸ்பார்க் பிரைவேட்
லிமிடெட் நியூ தில்லி - 110 015




## அத்தியாயம் 46

## பொங்கிய உள்ளம்



இளவரசர் யானையின் காதில் மந்திரம் ஓதினார். யானை படுத்தது. இருவரும் அவசரமாக அதன் முதுகிலிருந்து இறங்கினார்கள். கரை தட்டி மணலில் புதைந்திருந்த மரக்கலத்தின் அருகில் சென்று பார்த்தார்கள். அந்தக் கப்பலின் கதி பார்க்கப் பரிதாபமாயிருந்தது. பாய்மரங்கள் தாறுமாறாக உடைந்து கிடந்தன. ஒரு வேளை அந்த உடைந்த கப்பலுக்குள்ளேயோ அல்லது அக்கம் பக்கத்திலோ யாராவது இருக்கக் கூடும் என்று சந்தேகித்தார்கள். இளவரசர் கையைத் தட்டிச் சத்தம் செய்தார். பூங்குழலி வாயைக் குவித்துக்கொண்டு கூவிப் பார்த்தாள். ஒன்றுக்கும் பதில் இல்லை. இருவரும் தண்ணீரில் இறங்கிச் சென்று கப்பலின் விளிம்பைப் பிடித்துக் கொண்டு ஏறினார்கள். கப்பலின் அடிப் பலகைகள் பிளந்து தண்ணீரும் மணலும் ஏராளமாக உள்ளே வந்திருந்தன. ஒரு வேளை அதை நீரிலே தள்ளிவிட்டுக் கடலில் செலுத்தலாமோ என்ற ஆசை நிராசையாயிற்று. அந்தக் கப்பலை அங்கிருந்து தண்ணீரில் நகர்த்துவது இயலாத காரியம். கரையில் இழுத்துப் போடுவதற்கு ஒரு யானை போதாது; பல யானைகளும் பல ஆட்களும் வேண்டும். அதைச் செப்பனிடப் பல மாதங்கள் மரக்கலத் தச்சர்கள் வேலை செய்தாக வேண்டும்.

சிதைந்து கிடந்த பாய் மரங்களிடையே சிக்கியிருந்த புலிக்கொடியை இளவரசர் எடுத்துப் பார்த்தார். அது அவருக்குமிக்கமன வேதனையை அளித்தது என்று நன்றாய்த் தெரிந்தது.

"பூங்குழலி! நீ பார்த்த கப்பல்களில் ஒன்றுதானா இது?" என்று கேட்டார்.

"அப்படித்தான் தோன்றுகிறது. இன்னொரு கப்பல் அடியோடு முழுகித் தொலைந்து போய்விட்டது போலிருக்கிறது!" என்றாள் பூங்குழலி. அவ

**அமரர் கல்கி**

ளுடைய குரலில் குதூகலம் தொனித்தது.

"என்ன இவ்வளவு உற்சாகம்?" என்று இளவரசர் கேட்டார்.

"தங்களைச் சிறைப்படுத்திக் கொண்டுபோவதற்குவந்த கப்பல்கள் முழுகித் தொலைந்து போனால் எனக்கு உற்சாகமாக இராதா?" என்றாள் பூங்குழலி.

"நீ உற்சாகப்படுவது தவறு, சமுத்திர குமாரி! ஏதோ விபரீதமாக நடந்து போயிருக்கிறது. புலிக்கொடி தாங்கிய மரக்கலத்துக்கு இந்தக் கதி நேர்ந்தது எனக்கு வேதனை அளிக்கிறது. இது எப்படி நேர்ந்தது என்றும் தெரியவில்லை. இதில் இருந்த வீரர்களும் மாலுமிகளும் என்ன ஆனார்கள்? அதை நினைத்தால் என் மனம் மேலும் குழம்புகிறது. இன்னொரு கப்பல் முழுகிப் போய் இருக்க வேண்டும் என்றா சொல்லுகிறாய்?"

"முழுகிப் போயிருக்கலாம் என்று சொல்லுகிறேன். முழுகிப் போயிருந்தால் ரொம்ப நல்லது."

"நல்லதில்லவேயில்லை. அப்படி ஒரு நாளும் இராது. இந்தக் கப்பலின் கதியைப்பார்த்துவிட்டுஇன்னொருகப்பல் அப்பால் நிறையத் தண்ணீர் உள்ள இடத்துக்குப் போயிருக்கலாம். இந்தக் கப்பல் ஏன் இவ்வளவு கரையருகில் வந்திருக்க வேண்டும் என்றும் தெரியவில்லை. சோழ நாட்டு மாலுமிகள் ஆயிரமாயிரம் ஆண்டுகளாகக் கப்பல் விட்டுப் பழக்கமுள்ள பரம்பரையில் வந்தவர்கள். அவர்கள் இத்தகைய தவறு ஏன் செய்தார்கள்? எப்படியும் இதிலிருந்தவர்கள் தப்பிப் பிழைத்திருக்க வேண்டும். ஒன்று மற்றக் கப்பலில் ஏறிப் போயிருக்க வேண்டும். அல்லது அக்கம்பக்கத்தில் எங்கேயாவது இருக்க வேண்டும்! வா! போய்ப் பார்க்கலாம்!"

"எங்கே போய்ப் பார்ப்பது, இளவரசே! சூரியன் அஸ்தமித்து நாலாபுறமும் இருள் சூழ்ந்து வருகிறதே!" என்றாள் பூங்குழலி.

"சமுத்திரகுமாரி! உன் படகை எங்கே விட்டு வந்தாய்?"

"என் படகு ஏறக்குறைய இந்த ஆற்றின் நடு மத்தியில் அல்லவா இருக்கிறது? யானைமீது வந்தபடியால், அதுவும் நீங்கள் யானையைச் செலுத்திய படியால், இவ்வளவு சீக்கிரம் வந்து விட்டோம். படகில் ஏறியிருந்தால் நள்ளிரவுக்குத்தான் இங்கு வந்திருப்போம்."

"சரி! நன்றாக இருட்டுவதற்குள் இந்த நதிக்கரையோரமாகப் போய்ப் பார்க்கலாம் வா! இங்குள்ள மரங்கள் கடல் நன்றாய்த் தெரியாமல் மறைக்கின்றன. ஒருவேளை இன்னொரு கப்பலைக் கடலில் சற்றுத் தூரத்தில் கொண்டு போய் நிறுத்தியிருக்கலாம் அல்லவா?"

யானையை அங்கேயே விட்டு விட்டு இருவரும் நதிக்கரையோரமாகக் கடலை நோக்கிப் போனார்கள். சீக்கிரத்திலேயே கடற்கரை வந்துவிட்டது. கடலில் அமைதி குடிகொண்டிருந்தது. அலை என்பதற்கு அறிகுறியும் இல்லை. கண்ணுக்கெட்டிய தூரம் ஒரே பச்சை வர்ணத் தகடாகத் தோன்றியது. கடலின் பச்சை நிறமும் வானத்தின் மங்கிய நீலநிறமும் வெகு தூரத்திற்கு அப்பால் ஒன்றாய்க் கலந்தன.

மரக்கலமோ, படகோ ஒன்றும் தென்படவில்லை. ஒன்றிரண்டு பறவைகள் கடலிலிருந்து கரையை நோக்கிப் பறந்து வந்தன. அவ்வளவுதான்!

சிறிதுநேரம் அங்கே நின்று நாலாபுறமும் சுற்றிச் சுற்றிப் பார்த்துவிட்டு, "சரி! புதைந்த மரக்கலத்துக்குப் போகலாம்!" என்றார் இளவரசர்.

இருவரும் வந்த வழியே திரும்பி நடக்கத் தொடங்கினார்கள்.

"பூங்குழலி! நீ எனக்குச் செய்த உதவியை என்றும் மறக்க மாட்டேன். ஆனால் இங்கே நாம் பிரிந்துவிட வேண்டியதுதான்" என்றார் இளவரசர்.

பூங்குழலி மௌனமாயிருந்தாள்.

"நான் சொல்கிறது காதில் விழுந்ததா? அந்தப் புதைந்த கப்பலிலேயே நான் காத்திருக்கத் தீர்மானித்து விட்டேன். சேநாதிபதி முதலியவர்கள் எப்படியும் இந்த இடத்தைத் தேடிக் கொண்டு வந்து சேர்வார்கள். அவர்

களுடன் கலந்தாலோசித்து மேலே செய்ய வேண்டியதைப் பற்றி முடிவு செய்வேன். ஆனால் உனக்கு இனி இங்கே வேலை இல்லை. உன் படகைத் தேடிப் பிடித்துப் போய்விடு. என் தந்தையைப் பற்றி நான் கூறியதை நினைவில் வைத்துக் கொள்......''

பூங்குழலி தயங்கி நின்றாள். அங்கிருந்த மரம் ஒன்றின் மீது சாய்ந்தாள். அதன் தாழ்ந்த கிளை ஒன்றை அவள் பிடித்துக் கொண்டாள்.

"என்ன, சமுத்திர குமாரி? என்ன?''

"ஒன்றுமில்லை, இளவரசரே! இங்கேயே தங்களிடம் விடைபெற்றுக் கொள்கிறேன், போய் வாருங்கள்!''

"கோபமா, பூங்குழலி!''

"கோபமா? தங்களிடம் கோபங் கொள்ள இந்தப் பேதைக்கு என்ன அதிகாரம்? அவ்வளவு அகம்பாவம் நான் அடைந்து விடவில்லை.''

"பின்னர், ஏன் திடீரென்று இங்கே நின்று விட்டாய்?''

"கோபம் இல்லை, ஐயா! களைப்புத் தான்! நான் உறங்கி இரண்டு நாள் ஆகிறது. இங்கேயே சற்றுப் படுத்திருந்துவிட்டு என் படகைத் தேடிக் கொண்டு போகிறேன்.''

அது பௌர்ணமிக்கு மறுநாள். ஆகையால் அச்சமயம் கீழைக் கடலில் சந்திரன் உதயமாகிக் கொண்டிருந்தது. இரண்டொரு மங்கிய கிரணங்கள் பூங்குழலியின் முகத்திலும் விழுந்தன.

இளவரசர் அந்த முகத்தைப் பார்த்தார். அதில் குடிகொண்டிருந்த சோர்வையும் களைப்பையும் பார்த்தார். கண்கள் பஞ்சடைந்து இமைகள் தாமாக மூடிக் கொள்வதையும் பார்த்தார்.

சந்திரன் உதயமாகும் போது செந்தாமரை குவிதல் இயற்கைதான். ஆனால் பூங்குழலியின் முகத்தாமரை அப்போது குவிந்தது என்று மட்டும் சொல்வதற்கில்லை. அது வாடி வதங்கிச் சோர்ந்து போயிருந்தது.

"பெண்ணே! தூங்கி இரண்டு நாளாயிற்று என்றாயே? சாப்பிட்டு எத்தனை நாள் ஆயிற்று?'' என்றார்.

"சாப்பிட்டும் இரண்டு நாளைக்கு மேல் ஆயிற்று. தங்களுடன் இருந்த வரையில் பசியே தெரியவில்லை.''

"என் மூடத்தனத்தை என்னவென்று சொல்வது? இன்று பகல் நாங்கள் எல்லாரும் வயிறு புடைக்க விருந்துண்டோம். 'நீ சாப்பிட்டாயா?' என்று கூடக் கேட்கத் தவறி விட்டேன்! வா! பூங்குழலி! என்னுடன் அந்தப் புதைந்த கப்பலுக்கு வா! அதில் தானியங்கள் சிதறிக் கிடந்ததைப் பார்த்த ஞாபகம் இருக்கிறது. அந்தத் தானியங்களைத் திரட்டி இன்று இரவு கூட்டாஞ்சோறு சமைத்து உண்போம். சாப்பிட்ட பிறகு நீ உன் வழியே போகலாம்......''

"ஐயா! சாப்பிட்டால் உடனே அங்கேயே படுத்துத் தூங்கி விடுவேன். இப்போதே கண்ணைச் சுற்றுகிறது.''

"அதனால் என்ன? நீ அந்தப் புதைந்த கப்பலில் நிம்மதியாகப் படுத்துத் தூங்கு! நானும் யானையும் கரையிலிருந்து காவல் காக்கிறோம். பொழுது விடிந்ததும் நீ உன் படகைத் தேடிப் போ!''

இவ்விதம் சொல்லி இளவரசர் பூங்குழலியின் கரத்தைப் பற்றி அவளைத் தாங்குவார் போல நடத்தி அழைத்துக் கொண்டு சென்றார். உண்மையிலேயே அவளுடைய கால்கள் தள்ளாடின என்பதைக் கண்டார். அந்தப் பெண்ணின் அன்புக்கு ஈரேழு உலகிலும் இணை ஏது என்று எண்ணிய போது அவருடைய கண்களில் கண்ணீர் துளித்தது.



தைந்திருந்த கப்பலுக்கு அவர்கள் திரும்பி வந்து சேர்ந்த போது அக்கப்பலுக்குப் பின்னால் புகை கிளம்புவதைக் கண்டு திடுக்கிட்டார்கள். ஒருவேளை அந்தக் கப்பலைச் சேர்ந்தவர்கள் எங்கேயாவது போயிருந்து திரும்பி வந்திருக்கலாம் அல்லவா? திடீரென்று அவர்கள் முன்னால் தோன்றினால் ஏதாவது ஒன்று கிடக்க ஒன்று நேரிடக் கூடும். ஆகையால் மெள்ள மெள்ளச் சத்தமிடாமல் சென்றார்கள். வெகு சமீபத்தில் அவர்கள் போன பிறகும் பேச்சுக் குரல் ஒன்றும் கேட்கவில்லை. மறைவில் இருப்பவர்கள் யார், அவர்கள் எத்

தனை பேர் என்றும் தெரியவில்லை. வள்ளிக்கிழங்கு சுடும் மணம் மட்டும் கம்மென்று வந்தது. பூங்குழலியின் நிலையை இப்போது இளவரசர் நன்கு அறிந்திருந்தபடியால் அவளுடைய பசியைத் தீர்ப்பது முதல் காரியம் என்று கருதினார். ஆகையால் வந்தது வரட்டும் என்று கப்பலைச் சுற்றிக் கொண்டு அப்பால் சென்று பார்த்தார். அங்கே அடுப்பு மூட்டிச் சமைப்பதற்கு ஏற்பாடுகள் செய்து கொண்டிருந்தது ஒரு பெண்மணி என்று தெரிந்தது. யார் அந்தப் பெண்மணி என்பதும் அடுத்த கணத்திலேயே தெரிந்து போயிற்று. அந்த மூதாட்டி இவர்களைக் கண்டு ஆச்சரியப்பட்டதாகத் தெரியவில்லை. இவர்களை எதிர்பார்த்தவளாகவே தோன்றியது. வாய்ப் பேச்சின் உதவியின்றி இவர்களை அம்மூதாட்டி வரவேற்றாள். சற்று நேரத்துக்கெல்லாம் அமுதும் படைத்தாள். பழையாறை அரண்மனையில் அருந்திய இராஜ போகமான விருந்துகளையெல்லாம் காட்டிலும் இம்மூதாட்டி அளித்த வரகரிசிச் சோறும், வள்ளிக்கிழங்கும் சுவை மிகுந்ததாக இளவரசருக்குத் தோன்றியது.

சாப்பிட்ட பிறகு மூன்று பேரும் கப்பலின் தளத்துக்குப் போய்ச் சேர்ந்தார்கள். சந்திரன் இப்போது நன்றாக மேலே வந்திருந்தான். கப்பலின் தளத்திலிருந்து பார்த்தபோது, கடலும் தொண்டைமானாறும் ஒன்றாகக் கலக்கும் இடமும் அதற்கு அப்பால் பரந்த கடலும் தெரிந்தன. முன் மாலை இருள் வேளையில் பச்சைத் தாமிரத் தகட்டைப் போல் தோன்றிய கடல் இப்போது பொன் வண்ண நிலாவின் கிரணங்களினால் ஒளி பெற்றுத் தங்கத் தகடாகத் திகழ்ந்தது.

அவர்கள் இரவில் திறந்த வெளியில் சுற்றிலும் நீர் சூழ்ந்த இடத்தில் இருந்த போதிலும் புழுக்கத்தினால் உடம்பு வியர்த்தது. காற்று என்பது லவலேசமும் இல்லை. இதைப் பற்றி இளவரசர் பூங்குழலியிடம் கூறியதை அந்த மூதாட்டி எப்படியோ தெரிந்து கொண்டாள். வானத்தில் சந்திரனைச் சுற்றி ஒரு சாம்பல் நிற வட்டம் ஏற்பட்டிருப்பதைச் சுட்டிக் காட்டினாள். "சந்திரனைச் சுற்றி வட்டமிட்டிருந்தால் புயலும் மழையும் வரும் என்பதற்கு அடையாளம்" என்று பூங்குழலி விளக்கிக் கூறினாள். "புயல் வருகிற போது வரட்டும்; இப்போது கொஞ்சம் காற்று வந்தால் போதும்!" என்றார் இளவரசர். பிறகு அந்த மூதாட்டி எப்படி அவ்வளவு சீக்கிரத்தில் அங்கு வந்து சேர்ந்திருக்க முடியும் என்று தமது வியப்பைத் தெரிவித்தார். "என் அத்தைக்கு இது ஒரு பெரிய காரியம் அல்ல; இதைவிட அதிசயமான காரியங்களை அவர் செய்திருக்கிறார்!" என்றாள் பூங்குழலி. "மேலும் தங்களிடம் அவருக்கு இருக்கும் அன்புக்கு அளவே கிடையாது. அன்பின் சக்தியினால் எதைத்தான் சாதிக்க முடியாது?" என்றாள்.

இந்தப் பேச்சையும் அந்த மூதாட்டி எப்படியோ தெரிந்து கொண்டு பூங்குழலியின் முகத்தைத் திருப்பி ஒரு திக்கைச் சுட்டிக்காட்டினாள். அங்கே அவர்கள் ஏறி வந்த யானை நின்று கொண்டிருந்தது. அதற்குப் பக்கத்தில் கம்பீரமான உயர்ந்த சாதிக் குதிரை ஒன்று நின்றதைக் கண்டு இருவரும் அதிசயித்தார்கள்.

"இந்தக் குதிரையின் மீது ஏறி இவர் வந்தாரா என்ன? இவருக்குக் குதிரை ஏறத் தெரியுமா?" என்று இளவரசர் வியப்புடன் கேட்டார்.

"அத்தைக்குத் தெரியாதது ஒன்றும் இல்லை. குதிரை ஏற்றம், யானை ஏற்றம் எல்லாம் தெரியும். படகு வலிக்கத் தெரியும். சில சமயம் காற்றில் ஏறிப் பிரயாணம் செய்வாரோ என்று நினைக்கத் தோன்றும். அவ்வளவு சீக்கிரம் ஓரிடத்திலிருந்து இன்னொரிடம் வந்து விடுவார். எப்படி வந்திருக்க முடியும் என்று நமக்கு ஆச்சரியமாயிருக்கும்."


ளவரசர் அப்போது வேறோர் ஆச்சரியத்தில் மூழ்கியிருந்தார். கரையில் மேய்ந்து கொண்டிருந்த குதிரையின் கம்பீரத் தோற்றந்தான் அவருக்கு அத்தகைய வியப்பை உண்டாக்கியது.

"அரபு நாட்டில் வளரும் உயர்ந்த சாதிக் குதிரைகளில் மிக உயர்ந்த



குதிரையல்லவா இது? எப்படி இங்கேவந்தது? எப்படி இந்தமூதாட்டிக்குக் கிடைத்தது?'' என்று தமக்குத் தாமே சொல்லிக் கொண்டார்.

பூங்குழலி சமிக்ஞை பாஷையினால் இதைப் பற்றி ஊமை ராணியிடம் கேட்டாள். (ஆம்; 'ஊமை ராணி' என்று இனி நாம் அந்த மூதாட்டியை அழைக்கலாம் அல்லவா?) 'யானை இறவு'த் துறைக்குப் பக்கத்தில் இந்தக் குதிரை கடலிலிருந்து கரையேறியது என்றும், கரை ஏறியதும் தெறி கெட்டுப் பிரமித்து நின்று கொண்டிருந்ததென்றும், ஊமை ராணி அதை அன்புடன் தட்டிக் கொடுத்து வசப்படுத்தி அதன் மேல் ஏறிக் கொண்டு வந்ததாகவும் தெரியப்படுத்தினாள். இதைக் கேட்ட இளவரசரின் வியப்பு மேலும் அதிகமாயிற்று.

பேசிக் கொண்டிருக்கும் போதே பூங்குழலியின் கண்ணிமைகள் மூடிக் கொள்வதை இளவரசர் கவனித்தார். ''முன்னமே தூக்கம் வருகிறது என்று சொன்னாய். நீ படுத்துக் கொள்!'' என்றார். அப்படிச் சொன்னதுதான் தாமதம்; பூங்குழலி அவ்விடமிருந்து சற்று விலகிச் சென்று படுத்துப் பக்கத்தில் கிடந்த கப்பல் பாய் ஒன்றை எடுத்துப் போர்த்திக் கொண்டாள். படுத்த சிறிது நேரத்துக்கெல்லாம் தூங்கிப் போனாள். அவள் மூச்சுவிட்ட தோரணையிலிருந்து அவள் தூங்கி விட்டாள் என்று தெரிந்தது.

ஆனால் தூக்கத்திலேயே அவளுடைய வாய் மெல்லிய குரலில்

பாட்டு ஒன்றை முணுமுணுத்தது.

"அலைகடலும் ஓய்ந்திருக்க
அகக் கடல்தான் பொங்குவதேன்?"

ஆகா! இதே பாட்டை வந்தியத்தேவன் நேற்று அடிக்கடி முனகிக் கொண்டிருந்தான்! இவளிடந்தான் கற்றுக் கொண்டான் போலும். மற்றொரு சமயம் சமுத்திரகுமாரி விழித்துக் கொண்டிருக்கும்போது பாட்டு முழுவதையும் பாடச் சொல்லிக் கேட்க வேண்டும் என்று இளவரசர் எண்ணினார். உடனே ஊமை ராணியிடம் அவர் கவனம் சென்றது. ஆகா! எல்லாருக்குந்தான் சில சமயம் அகக்கடல் பொங்குகிறது; நெஞ்சகம் விம்முகிறது! ஆனாலும் வாய்திறந்து தன் உணர்ச்சிகளை என்றும் வெளியிட முடியாத இந்த மூதாட்டியின் உள்ளக் கொந்தளிப்புக்கு உவமானம் ஏது? எத்தனை ஆசாபாசங்கள், எத்தனை மகிழ்ச்சிகள், எத்தனை துயரங்கள், எவ்வளவு கோபதாப ஆத்திரங்கள் எல்லாவற்றையும் இவள் தன் உள்ளத்திலேயே அடக்கி வைத்திருக்கிறாள்? எத்தனை காலமாக அடக்கி வைத்திருக்கிறாள்?......

ஊமை ராணி இடம் பெயர்ந்து இளவரசரின் அருகில் வந்து அமர்ந்தாள். அவருடைய தலைமயிரை அன்புடன் கோதிவிட்டாள். அவருடைய இரண்டு கன்னங்களையும் பூவைத் தொடுவதைப் போல் தன் வலிய வைரமேறிய கரங்களினால் மிருதுவாகத் தொட்டுப் பார்த்தாள். இளவரசருக்குச் சற்று நேரம் என்ன செய்வது என்றே தெரியவில்லை. பிறகு அந்த மூதாட்டியின் பாதங்களைத் தொட்டுத் தம் கண்ணில் ஒற்றிக் கொண்டார். அவள் அந்தக் கரங்களைப் பிடித்துத் தன் முகத்தில் வைத்துக் கொண்டாள். இளவரசருடைய கரங்கள் விரைவில் அந்தப் பெண்ணரசியின்





கண்ணில் பெருகிய நீரால் நனைந்து ஈரமாயின.

ஊமை ராணி சமிக்ஞையினால் இளவரசரையும் படுத்து உறங்கச் சொன்னாள். தான் காவல் இருப்பதாகவும் கவலையின்றித் தூங்கும்படியும் சொன்னாள். இளவரசருக்குத் தூக்கம் வரும் என்று தோன்றவில்லை. ஆயினும் அவளைத் திருப்தி செய்வதற்காகப் படுத்தார். படுத்து வெகுநேரம் வரையில் அவர் உள்ளக் கடல் கொந்தளித்துக் கொண்டிருந்தது. பிறகு வெளியில் சிறிது குளிர்ந்த காற்று வந்தது. உடல் குளிரவே உள்ளம் குவிந்தது; இலேசாக உறக்கமும் வந்தது.



ஆனால் உறக்கத்திலும் இளவரசரின் மனம் அமைதியுறவில்லை. பற்பல விசித்திரமான கனவுகள் கண்டார். அரபு நாட்டுச் சிறந்த குதிரை ஒன்றின் மீது ஏறி வான வெளியில் பிரயாணம் செய்தார். மேக மண்டலங்களைக் கடந்து வானுலகில் புகுந்தார். அங்கே தேவேந்திரன் அவரை ஐராவதத்தில் ஏற்றி அழைத்துச் சென்றான். தன்னுடைய இரத்தினச் சிங்காதனத்தில், அவரை உட்காரச் சொன்னான். "ஓ! இது எனக்கு வேண்டாம். இந்தச் சிங்காதனத்தில் என் பெரிய தாயார் ஊமை ராணியை ஏற்றி வைக்க விரும்புகிறேன்" என்று இளவரசர் சொன்னார். தேவேந்திரன் சிரித்து, "அவள் இங்கே வரட்டும், பிறகு பார்க்கலாம்" என்றான். தேவேந்திரன் இளவரசருக்குத் தேவாமிர்தத்தைக் கொடுத்துப் பருகச் சொன்னான். இளவரசர் அருந்திப் பார்த்துவிட்டு, "ஓ! இது காவேரித் தண்ணீர் போல் அவ்வளவு நன்றாயில்லையே?" என்றார். தேவேந்திரன் இளவரசரை அந்தப்புரத்துக்கு அழைத்துப் போனான். அங்கே தேவமகளிர் பலர் இருந்தார்கள். இந்திராணி இளவரசரைப் பார்த்து "இந்தப் பெண்களுக்குள்ளே அழகில் சிறந்தவள் யாரோ அவளை நீர் மணந்து கொள்ளலாம்" என்றாள். இளவரசர் பார்த்து விட்டு, "இவர்களில் யாரும் பூங்குழலியின் அழகுக்கு அருகிலும் வரமாட்டார்கள்" என்றார். திடீரென்று இந்திராணி இளைய பிராட்டியாக மாறினாள். "அருள்மொழி! என் வானதியை மறந்து விட்டாயா?" என்று கேட்டாள். இளவரசர் "அக்கா! அக்கா! எத்தனை நாளைக்கு என்னை நீ அடிமையாக வைத்திருக்கப் போகிறாய்? உன்னுடைய அன்பின் சிறையைக் காட்டிலும் பழுவேட்டரையரின் பாதாளச் சிறை மேல்! என்னை விடுதலை செய்! இல்லாவிட்டால் விராட ராஜனுடைய புதல்வன் உத்தர குமாரனைப் போல் என்னை அரண்மனையிலேயே இருக்கச் செய்துவிடு. ஆடல் பாடல்களில் காலங்கழித்துக் கொண்டிருக்கிறேன்" என்றார். இளையபிராட்டி குந்தவை தன் பவழச் செவ்விதழ்களில் காந்தள் மலரையொத்த விரலை வைத்து அவரை வியப்புடன் நோக்கினாள். "அருள்மொழி! நீ ஏன் இப்படி மாறிப் போய்விட்டாய்? யார் உன் மனத்தைக் கெடுத்தார்கள்? ஆம், தம்பி! அன்பு என்பது ஓர் அடிமைத்தனம்தான். அதற்கு நீ கட்டுப்பட்டுத்தான் ஆக வேண்

டும்" என்றாள். "இல்லை, அக்கா! இல்லை! நீ சொல்வது தவறு. அடிமைத்தனம் இல்லாத அன்பு உண்டு. உனக்கு அதைக் காட்டட்டுமா? இதோ கூப்பிடுகிறேன், பார்!...... பூங்குழலி! பூங்குழலி! இங்கே வா!" என்று கூவினார்.



பலபல என்று பொழுது விடியும் சமயத்தில் பூங்குழலி குதிரையின் காலடிச் சத்தம் கேட்டு விழித்துக் கொண்டாள். ஊமை ராணி குதிரைமேல் ஏறிப் புறப்படுவதைப் பார்த்தாள். அவளைத் தடுப்பதற்காக எழுந்து ஓடினாள். அவள் கப்பலிலிருந்து இறங்கிக் கரைக்குச் செல்வதற்கு முன்னால் குதிரை பறந்து சென்று விட்டது.

உதய நேரம் மிக்க மனோகரமாயிருந்தது. பூங்குழலியின் உள்ளத்தில் என்றுமில்லாத உற்சாகம் ததும்பியது. அங்கிருந்தபடியே கப்பலின் மேல் தளத்தைப் பார்த்தாள். இளவரசர் தூங்கிக் கொண்டிருந்தார். பூங்குழலி நதிக்கரையோரமாகப் பறவைகளின் இனிய கானத்தைக் கேட்டுக் கொண்டு நடந்தாள். ஒரு மரத்தின் வளைந்த கிளையில் ஒரு பெரிய ராட்சதக் கிளி உட்கார்ந்திருந்தது. பூங்குழலியைக் கண்டு அது அஞ்சவில்லை. "எங்கே வந்தாய்?" என்று கேட்பது போல் அவளை உற்றுப் பார்த்தது.

"கிளித் தோழி! இன்னும் சற்று நேரத்துக்கெல்லாம் இளவரசர் இங்கிருந்து போய் விடுவார். பிறகு எனக்கு நீதான் துணை. என்னோடு பேசுவாய் அல்லவா?" என்று பூங்குழலி கேட்டாள்.

அச்சமயம் "பூங்குழலி! பூங்குழலி!" என்ற குரல் கேட்டது. முதலில் கிளிதான் பேசுகிறது என்று நினைத்தாள். இல்லை; குரல் கப்பலிலிருந்து வருகிறது என்று உணர்ந்தாள். இளவரசர் அழைக்கிறார் என்று அறிந்து குதித்தோடினாள். ஆனால் கப்பல் மேல் ஏறிப் பார்த்த போது இளவரசர் இன்னமும் தூங்கிக் கொண்டிருந்தார். பூங்குழலி அவர் அருகில் சென்ற போது அவருடைய வாய் மீண்டும், "பூங்குழலி! பூங்குழலி!" என்று முணுமுணுத்தது. உடல் புளகாங்கிதம் கொண்ட அப்பெண், இளவரசரின் அருகில் சென்று அவருடைய நெற்றியைத் தொட்டு எழுப்பினாள்.

இளவரசர் உறக்கமும் கனவும் கலந்து எழுந்தார். கீழ்த்திசையில் சூரியன் உதயமாகிக் கொண்டிருந்தான். பூங்குழலியின் முகம் மலர்ந்த செந்தாமரையைப் போல் பிரகாசித்தது. "என்னை அழைத்தீர்களே, எதற்கு?" என்று கேட்டாள். "உன் பெயரைச் சொல்லி அழைத்தேனா, என்ன? தூக்கத்தில் ஏதோ பேசியிருப்பேன். நீ நேற்றிரவு தூங்கிக் கொண்டே பாடினாயே! நான் தூக்கத்தில் பேசக் கூடாதா?" என்றார்.

இளவரசர் குதித்து எழுந்தார். "ஓகோ! இத்தனை நேரமா தூங்கி விட்டேன்! பெரியம்மா எங்கே?" என்று கேட்டுச் சுற்றுமுற்றும் பார்த்தார். அந்த மூதாட்டி அதிகாலையில் குதிரை

## அருள்வாக்கு



**ஆ**ழ்வார்கள் விஷ்ணு பரமாகப் பாடி வைத்திருக்கிறார்கள். நால்வர் சிவ பரமாகப் பாடினார்கள். வேதத்தில் ஸகல தெய்வங்களையும் ஒரே மாதிரி ஸ்தோத்திரம் செய்திருக்கிறது. உபநிஷத்து என்று போனால், அங்கே தெய்வங்களைப் பற்றி அதிகம் பேச்சில்லாமல் எல்லாம் ஆத்ம தத்துவமாகச் சொல்லியிருக்கிறது. இங்கே திருவள்ளுவரை எடுத்துக் கொண்டால் அவர் தெய்வம், தத்வம் இவைகளைப் பற்றி, வைதிக சம்பிரதாயப்படியே சொல்லியிருந்தாலும், அதை விட ரொம்ப அதிகமாக தர்மங்கள், நன்னெறிகள் (morals, ethics) இவற்றையே சொல்கிறார். இன்னொரு பக்கம் திருமூலரைப் பார்த்தால், அங்கே ஸ்வாமி பக்தி என்பதை விடப் பிராணாயாமம், தியானம், தாரணை, ஸமாதி இத்யாதி யோக சமாசாரங்கள்தான் நிறைய வருகின்றன. 'இப்படி ஒவ்வொன்றும் ஒவ்வொன்றைச் சொன்னால் எதை எடுத்துக் கொள்வது?' என்றால் எதை எடுத்துக் கொண்டாலும் தப்பில்லை. நாம் எடுத்துக் கொண்டதை நடுவிலே விடாமல், அதையே நம்பிக்கையோடு பிடித்துக் கொண்டு போய்க் கொண்டேயிருந்தால் முடிவில் எது பரமார்த்த சத்தியமோ அதையே அடைந்து விடுவோம். ஆரம்பத்தில் இவை வேறு வேறு வழியாகத் தோன்றினாலும் முடிவில் எல்லாம் கொண்டு சேர்க்கிற இடம் ஒன்றுதான்.

தேவர் குறளும் திருநான்மறை முடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும்—கோவை
திருவாசகமும் திருமூலர் சொல்லும்
ஒருவாசகம் என்(று) உணர்.

எல்லாமே, அவரவரின் ருசி விசித்திரத்தைப் பொறுத்து ஒரே பரமாத்மா தத்துவத்தில் கொண்டு சேர்க்க ஏற்பட்டவை தான். எந்த நதியானாலும் ஒரே சமுத்திரத்தில் போய் விழுகிற மாதிரி.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

ஏறிப் போய் விட்டதைச் சமுத்திர குமாரி கூறினாள்.

"நல்ல காரியம் செய்தாள் சமுத்திர குமாரி! உன் களைப்புத் தீர்ந்து விட்டதாகக் காண்கிறது. நீயும் இனி விடை பெற்றுக் கொள்ளலாம். என் நண்பர்கள் வரும் வரையில் நான் இங்கேயே இருக்க வேண்டும். அதுவரை இந்தக் கப்பலைச் சோதித்துப் பார்க்கப் போகிறேன்!" என்றார்.

பூங்குழலி, "அதோ! அதோ!" என்று சுட்டிக் காட்டினாள். அவள் காட்டிய திசையை இளவரசர் நோக்கினார். கடலில் வெகு தூரத்தில் ஒரு பெரிய மரக்கலம் தெரிந்தது. கடற்கரையோரமாக ஒரு சிறிய படகு வருவதும் தெரிந்தது. படகிலே ஐந்தாறு பேர் இருந்தார்கள்.

"ஆகா! இப்போது எல்லா விவரங்களும் தெரிந்து போய்விடும்!" என்றார் இளவரசர்.

தாம் அங்கிருப்பது தெரியாமல் ஒருவேளை படகு கடற்கரையோடு போய்விடலாம் என்று இளவரசர் அஞ்சினார். ஆகையால் உடனே புதைந்த கப்பலிலிருந்து கீழிறங்கி நதிக்கரையோரமாகக் கடற்கரையை நோக்கிச் சென்றார். பூங்குழலி அவரைத் தொடர்ந்து சென்றாள். யானையும் அவர்களைப் பின் தொடர்ந்து அசைந்தாடிக் கொண்டு சென்றது.



டற்கரையிலே போய் நின்றார்கள். மரக்கலம் அவர்களைவிட்டுத் தூரத் தூரப் போய்க் கொண்டிருந்தது. படகு அவர்களை நெருங்கி நெருங்கி வந்துகொண்டிருந்தது.

முதலில் பின்னால் ஒதுங்கி நின்ற

பூங்குழலி ஆர்வங் காரணமாகச் சிறிது நேரத்துக்குள் முன்னால் வந்து விட்டாள்.

இளவரசருடைய மனக்கவலைக ளுக்கிடையே பூங்குழலியின் ஆர்வம் அவருக்குக் களிப்பை ஊட்டியது. அவர் முகத்தில் குறுநகை ததும்பியது. அவர் மனக்கவலை கொள்ளக் கார ணங்களும் நிறைய இருந்தன. தூரத் திலே போய்க் கொண்டிருந்த கப்ப லில் தாமும் போயிருக்க வேண்டும் என்றும் அது தன்னை விட்டு விட்டுத் தூர தூரப் போய்க் கொண் டிருந்ததாகவும் அவருக்குத் தோன்றி யது. அதுமட்டும் அன்று. கிட்ட நெருங்கி வந்து கொண்டிருந்த பட கிலே ஓர் ஆள் குறைவாயிருந்ததாகக் காணப்பட்டது. இருக்க வேண்டிய ஒருவர் அதில் இல்லை. ஆம்; அதோ சேநாதிபதி இருக்கிறார்; திருமலை யப்பர் இருக்கிறார்; உடன் வந்த வீரர் கள் இருக்கிறார்கள்; படகோட்டிகள் இருக்கிறார்கள். ஆனால் அந்த வாணர் குலத்து வாலிபனை மட்டும் காணோம். வல்லத்தரையன் எங்கே? அந்த உற் சாகபுருஷன், அஸகாயசூரன், அஞ்சா நெஞ்சம் படைத்த வீரன், இளைய பிராட்டி அனுப்பி வைத்த அந்தரங்கத் தூதன் எங்கே?...... இரண்டு நாள் தான் பழகியிருந்தபோதிலும் இளவரச ருக்கு நெடுநாள் பழக்கப்பட்ட நண் பன் போல் அவன் ஆகியிருந்தான். அவனுடைய குணாதிசயங்கள் அவ்வள வாக இளவரசருடைய மனத்தைக் கவர்ந்திருந்தன. அவனைப் படகில் காணாததும் அரிதில் கிடைத்த பாக்கி யத்தை இழந்தது போல் இளவரச ருக்கு வேதனை உண்டாயிற்று.

படகு இன்னும் நெருங்கிக் கரை யோரம் வந்ததும் சேநாதிபதி முதலிய வர்கள் தாவிக் கரையில் குதித்தார் கள். சேநாதிபதி பூதி விக்கிரமகேசரி ஓடிவந்து இளவரசரைக் கட்டிக் கொண்டார்.

''ஐயா! நல்ல காரியம் செய்தீர் கள்! எங்களை இப்படிக் கதிகலங்க அடிக்கலாமா?... யானையின் மதம் எப்படி அடங்கிற்று? இந்தப் பொல் லாத யானை இப்போது எவ்வளவு சாதுவாக நின்று கொண்டிருக் கிறது!...... இளவரசே! எப்போது இங்கே வந்து சேர்ந்தீர்கள்? பழு வேட்டரையர்களின் கப்பல்களைப் பார்த்தீர்களா? அவை எங்கே?'' என்று கொடும்பாளூர்ப் பெரிய வேளார் கேள்விமாரி பொழிந்தார்.

''சேநாதிபதி! எங்கள் கதையைப் பின்னால் சொல்கிறேன். வந்தியத் தேவர் எங்கே? சொல்லுங்கள்!'' என் றார்.

''அந்தத் துடுக்குக்காரப் பிள்ளை அதோ போகிற கப்பலில் போகி றான்!'' என்று சேநாதிபதி தூரத்தில் போய்க் கொண்டிருந்த கப்பலைக் காட் டினார்.

''ஏன்? ஏன்? அது யாருடைய கப் பல்? அதில் ஏன் வந்தியத்தேவர் போகி றார்?'' என்று இளவரசர் கேட்டார்.

''ஐயா! எனக்குப் புத்தி ஒரே கலக்க மாயிருக்கிறது. இந்த வைஷ்ணவனைக் கேளுங்கள்! இவனுக்கு உங்கள் சமா சாரமும் அந்த வாலிபன் சுபாவமும் தெரிந்திருக்கிறது!'' என்றார்.

இளவரசர் ஆழ்வார்க்கடியானைப் பார்த்து, ''திருமலை! வந்தியத்தேவர் ஏன் அக்கப்பலில் போகிறார்? தெரிந் தால் சீக்கிரம் சொல்லுங்கள்!'' என் றார்.

(தொடரும்)

திருடன் 1: அண்ணே உங்க எதிர்காலத் திட்டம் என்ன...?

திருடன் 2: பாஸ்போர்ட்டும், விசாவும் கிடைக்கட்டும், உலக பேங்க்கையே கொள்ளையடிக்கக் காட்டறேன்!

— சுரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா.



# “கற்றுக் கொடுக்கச் சென்றேன்; கற்றுக் கொண்டு திரும்பினேன்!”

**இசை என்பது மொழி, இன வேறுபாடுகளைக் கடந்தது; ஒரு நாட்டின் ஒருமைப்பாட்டுக்கு மட்டுமின்றிச் சர்வதேச ஒத்துழைப்புக்கும் நட்புறவுக்கும் வழி வகுக்கக் கூடியது என்பதை அனுபவபூர்வமாக உணர்ந்து எழுதுகிறார் ஜெர்மனியில் பணியாற்றிவிட்டுத் திரும்பியுள்ள அருணா சாயிராம்...**

ஜெர்மனி செல்வதற்கு விமானம் ஏறிய போது குறைந்த நம்பிக்கையுடனும் நிறைய சந்தேகத்துடனும்தான் இருந்தேன். எனக்கோ ஜெர்மன் மொழி பெயரளவுக்குத்தான் தெரியும்; என்னிடம் கர்நாடக இசை கற்றுக் கொள்ள இருந்த மாணவர்களுக்கோ இந்திய, ஆங்கில மொழிகள் புரியாததோடு இந்திய இசை பற்றி இம்மியளவு அறிவுகூடக் கிடையாது. நடப்பது நடக்கட்டும் என்ற தைரியத்தில் — கர்நாடக இசையில் எனக்கிருந்த முறையான பயிற்சியும் கச்சேரிகள் செய்த அனுபவமும், ஆசிரியர் பயிற்சியில் பெற்றிருந்த பி. ஈ. பட்டமும் கை கொடுக்காதா என்ற தெம்பில் — விமானம் ஏறிவிட்டேன்.

சில ஐரோப்பிய நாடுகளில் இந்திய இசை என்னும் போது ஹிந்துஸ்தானி இசையைத்தான் குறிப்பிடுகிறார்கள். 'சிதார்' தான் ஓரளவு பிரபலமடைந்திருக்கிறது. ஆனால், ஜெர்மனியில் நான் சந்தித்த மாணவர்களுக்கு இந்த அளவுக்குக்கூடத் தெரிந்திருக்கவில்லை. இது ஒரு வகையில் எனக்குச் சாதகமாகவே அமைந்தது. அடிப்படையிலிருந்து ஆரம்பித்து, கர்நாடக இசையை முறையாகப் பயிற்றுவிக்க முடிந்தது. அதற்கு முன்னதாக ஜெர்மன் மொழியில் சரளமாகப் பேச, டேப்புகளின் உதவியுடன் பழகிக் கொண்டேன்.

எங்கள் பயிற்சி வகுப்புகளில் நான் ஒரு ராகத்தைத் தேர்ந்தெடுத்து ஆலாபனை செய்வேன். ஆரம்பத்தில், கல்யாணி சங்கராபரணம் போன்ற மேளகர்த்தா ராகங்களைப் பாடினேன். மாணவர்கள் மிகவும் கருத்தூன்றிக் கேட்டார்கள். பிறகு அந்த ராகங்களின் சுவரஸ்தானங்களைத் தங்கள் இசைக் கருவிகளில் மெள்ள வாசித்தார்கள். ஏழு சுவரங்களையும் விதம் விதமான கலவைகளில் பிரயோகித்துக் கற்பனையாக வாசிக்க முடியும் என்பதே அவர்களுக்கு ஆச்சரியத்தையும் ஆனந்தத்தையும் அளித்தது. கற்பனைக்கும்



மனோதர்மத்துக்கும் இடமளிக்காத இசைப் பாணி அவர்களுடையது. எதிரே உள்ள 'நொடேஷனை'ப் பார்த்து அப்படியே வாசிக்க வேண்டும். எனவே கர்நாடக இசையின் இந்த அம்சம் அவர்களை மிகவும் கவர்ந்தது. ஒரு ராகத்தை எடுத்துக் கொண்டால், ஒவ்வொருவரும் தனித்தனியே அதை மணிக்கணக்காக வாசிப்பார்கள். இறுதியில் எல்லோரும் சேர்ந்து அதே ராகத்தை இசைப்பார்கள். அதைக் கேட்டது எனக்கும் சரி, அவர்களுக்கும் சரி, ஓர் அற்புதமான அனுபவமாக இருந்தது.

கீர்த்தனைகளைச் சொல்லிக் கொடுத்த போது அவற்றின் அர்த்தத்தைத் தெரிந்து கொள்ள மிகுந்த ஆர்வம் காட்டினார்கள். எல்லாக் கீர்த்தனைகளிலுமே பக்தி உணர்வு மேலோங்கி இருப்பது அவர்களை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது. கற்பனை ஸ்வரங்களில் நாம் புகுத்தும் லயச்சித்திரங்கள் அவர்களைப் புதிதாகச் சிந்திக்கச் செய்தன. குரு—சிஷ்ய பாரம்பரியத்தை வியந்தார்கள். ஆனால் எல்லாவற்றையும் விட அதிகமாக அவர்களைக் கவர்ந்த விஷயம் இந்தியர்களின் பேசும் குரலும் பாடும் குரலும் ஒன்றாகவே இருப்பது தான். அவர்கள் இசையில் அவ்விரண்டும் இரு வெவ்வேறு விஷயங்கள். இந்திய இசைக் கலைஞர்கள் பாடும்போது இந்த வித்தியாசத்தைப் புகுத்தாததால் பாடகரின் மனத்தில் இழையும் உணர்ச்சிகளும், பாவமும் அவரது ஆளுமையும் கேட்பவரை நேரடியாகச் சென்று அடைகின்றன என்று அவர்கள் கருதினார்கள். 'இதனால்தான் கர்நாடக இசை இதயத்தைத் தொடுகிறது, நெகிழச் செய்கிறது. மன அமைதியையும் சாந்தியையும் ஏற்படுத்துகிறது' என்றார்கள்.

**எ**ன்னிடம் பயிற்சி பெற்ற மாணவர்கள் எல்லோருமே மேற்கத்திய இசையில் ஏற்கெனவே சிறந்த தேர்ச்சி பெற்றிருந்தனர். எனவே தூய்மையான இசைக்குப் பழகிய அவர்களது செவிகளுக்கும் அறிவுக்கும் கர்நாடக இசையைக் கற்றுத் தருவது நான் பயந்தது போல் சிரமமாக இருக்கவில்லை. மேலும், ஒவ்வொரு மாணவருக்கும் ஓர் இசைக் கருவி வாசிக்கும் திறனும் இருந்தது. பேருதவியாக அமைந்தது. பயிற்சியின் போது அவர்கள் கேட்ட சில கேள்விகள் அவர்களுடைய கூர்ந்த நோக்கையும் ஆழ்ந்த சிந்தனையையும் வெளிப்படுத்தின:

- ஒரு ராகத்தைப் பாடுகையில், உங்கள் உணர்ச்சி எத்தகையதாய் இருக்கிறது?
- எவ்வளவு ராகங்கள் உள்ளன? புதிய ராகங்கள் படைக்கப்படுகின்றனவா?
- (ஓர் உணர்ச்சியைக் குறிப்பிட்டு)... இந்த உணர்ச்சியை விவரிக்கும் ஒரு ராகத்தைப் பாட முடியுமா...?

போன்ற கேள்விகளை எழுப்பினார்கள்.

ஜெர்மனிக்கு என்னை அழைத்திருந்த சார்லண்ட்ஸ் (**Musikhoschule des Saarlandes**) இசைப் பள்ளியினர் மூன்று மாத காலத்துக்குத் தங்கள் மாணவர்களுக்குப் பயிற்சி அளிக்கும்



பிருந்தா, முக்தா சகோதரிகளிடம் கர்நாடக இசை பயின்று, கச்சேரிகள் செய்து வருபவர் அருணா சாயிராம். இவர் இசையில் பட்ட மேல் படிப்புப் படித்துள்ளதோடு ஆசிரியர் பயிற்சிப் பட்டமும் பெற்றவர். கடந்த டிசம்பரில் நடந்த மியூசிக் அகாடமி இசை விழாவின்போது சிறப்பாகப் பாடியதற்காக இரண்டு பரிசுகள் இவருக்கு வழங்கப்பட்டுள்ளன.

படி என்னிடம் கேட்டிருந்தனர். அந்த மூன்று மாதங்களில் நானும் ஏராளமாகக் கற்றுக் கொண்டேன் — குறிப்பாக அவர்களுடைய இசைப் பயிற்சி முறைகள் என்னை வெகுவாகக் கவர்ந்தன.

வாய்ப்பாட்டு வகுப்புகளில் ஒவ்வொரு மாணவருக்கும் ஓர் ஆசிரியர் இருந்தார்! பயிற்சிக்கும் வகுப்புகள் நடத்துவதற்கும் ஏராளமான அறைகள் இருந்தன. விசாலமான, வெளிச்சமும் காற்றும் நிரம்பிய அந்த அறைகள் ஒவ்வொன்றிலும் ஓர் ஆளுயர நிலைக் கண்ணாடி இருந்தது. வகுப்பு நடத்தவோ, பயிற்சி செய்யவோ ஓர் அறையைத் தேர்ந்தெடுப்பவர் அதன் உள்ளே செல்வதற்கு முன், ஒரு காகிதத்தில் தனது பெயரையும், அறையை அவர் ஆக்கிரமிக்கப் போகும் நேரத்தையும் எழுதி அதனை அறைவாசற் கதவின் வெளிப்புறத்தில் பொருத்திவிடுவார். குறிப்பிட்ட நேரம் முடியும் வரை யாரும் அக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே போக முடியாது'





அதிகாலை ஆறு மணிக்கே சில மாணவர்கள் பயிற்சிக்கு வந்து விடுவார்கள். பல பயிற்சி வகுப்புகளில் நான் பார்வையாளராகப் பங்கேற்றேன். 'செல்லோ' என்ற ராக்ஷஸ வயலின் போன்ற கருவியைப் பயின்று கொண்டிருந்த ஒரு மாணவரிடம் அவர் வகுப்பில் நான் பார்வையாளராகப் பங்கேற்கலாமா என்று கேட்டபோது அவர் அளித்த பதில் என்னை வியப்பில் ஆழ்த்தியது. அவர் கூறினார்: ''என் தந்தை ஒரு புகழ் பெற்ற வாத்திய இசைக் கலைஞர். ஆனால் அவரையே எனது ஆசிரியர் எங்கள் வகுப்புக்குள் அனுமதிப்பதில்லை. அதனால் உங்கள் சார்பில் என் ஆசிரியரிடம் அனுமதி கேட்கக்கூட எனக்குத் தயக்கமாக இருக்கிறது''... அப்போதுதான் எனக்குப் புரிந்தது, மற்ற வகுப்புகளில் நான் அனுமதிக்கப்பட்டது எனக்கு மிகப் பெரிய கௌரவம் என்று!

திருமதி பெல்மன் என்ற ஆசிரியையிடம் நான் குரல் பயிற்சி பெற ஏற்பாடு செய்யப்பட்டது. முதல் வகுப்பில் என்னை அவர் லேசாக, தாழ்ந்த குரலில் ஒரு மெட்டைப் பாடச் சொன்னார். எவ்வளவு முயன்றும் அவரைப் போல் மிருதுவாக என்னால் பாட முடியவில்லை. ''உங்கள் 'ஹம்' (hum) இல் காற்றின் அழுத்தம் அதிகமாக இருக்கிறது'' என்றார் அவர். அவர் கூறியது எனக்கு விளங்கவேயில்லை. பிறகு அந்தக் கட்டத்திலிருந்து பின்னோக்கிச் சென்று அடிப்படை மூச்சுப் பயிற்சிகளை எனக்கு அவர் அளித்தார். வயிற்றுப் பகுதியில் மூச்சைக் கட்டுப்படுத்தி, இசைக்கு மூச்சு இடையூறு விளைவிக்காமல் பாடப் பயிற்சி அளித்தார். அப்போதுதான் தியாகராஜ ஸ்வாமிகள், 'நாபி ஹ்ருத் கண்ட ரஸந' என்று பாடியதன் அர்த்தம் எனக்கு விளங்கியது!

யமதர்மன்: சித்திரகுப்தரே! நமது நரகலோகவாசிகளைச் சித்திரவதை செய்ய பூலோகத்திலிருந்து புது வகைக் கருவியொன்றை வாங்கி வந்திருக்கிறேன்!''

சித்திரகுப்தன்: அப்படியா, 'என்ன அது?''

யமதர்மன்: இதை டெலிவிஷன் என்று அங்கே கூறுகிறார்கள்!

— சேத்தூர் அன்பழகன்.

ஜெர்மனியில், இசைக் கல்வியின் ஆரம்ப வகுப்பில் அடியெடுத்து வைத்திருந்த மாணவருக்குக்கூடப் 'பாடும் போது குரல் உடலுக்குள்ளிருந்து வெளிப்பட வேண்டும்' என்ற அடிப்படைப் பாடம் தெரிந்திருந்தது.

அதே போல், வார்த்தைகளின் உச்சரிப்பிலும் அதீத கவனம் செலுத்தினார்கள் ஜெர்மன் பேராசிரியர்கள். சில ஜெர்மன் பாடல்களை ஒரு நண்பரிடம் கற்றுக் கொண்டு ஒரு பேராசிரியரிடம் பாடிக்காட்டி, எனது ஜெர்மன் உச்சரிப்பைக் கச்சிதப்படுத்தச் சொல்லிக் கேட்டுக் கொண்டேன். வார்த்தைகளை உச்சரிக்கும்போது இசை சிதைவுறாமல் மிகக் கவனமாக உச்சரிக்க வேண்டும் என்பதைக் கற்றுக் கொடுத்தார் அவர்.

இந்தப் பயிற்சியை அவர்கள் விஞ்ஞான பூர்வமாக ஆராய்ந்து, கச்சிதப்படுத்தியுள்ளார்கள் என்பதைக் குறிப்பிட வேண்டும். பாடும்போது வாயை எப்படி, எந்த அளவுக்குத் திறக்க வேண்டும், நாக்கை எப்படிப் புரட்ட வேண்டும் என்பன போன்ற விஷயங்களைக் கருத்தூன்றிச் சொல்லித் தருகிறார்கள். ஒரு மணி நேர இசை வகுப்பில் சுமார் நாற்பது நிமிடங்கள் குரல் பயிற்சிக்கு ஒதுக்கப்படுகிறது. உயர் வகுப்பு மாணவர்கள் உட்பட எல்லோருக்குமே இப் பயிற்சி அளிக்கப்படுகிறது.

நமது வேத கோஷத்தைப் போல் ஜெர்மனியில் 'கிரெகோரியன் சான்ட்' என்று ஒன்று உண்டு. ஒவ்வொரு இசை மாணவருக்கும் இதில் கட்டாயப் பயிற்சி அளிக்கப்படுகிறது. இது குரல் வளத்தை அபிவிருத்தி செய்யப் பெருமளவுக்கு உதவுகிறது. நமது இசைக் கல்லூரிகளிலும் இது போன்ற பயிற்சி அளிக்கலாம் என்று தோன்றியது.

நேஷனல் அசோசியேஷன் ஆப் மியூசிக் நாடுதழுவிய அளவில் இசைப் போட்டிகளை நடத்தித் திறமைபடைத்த இளைஞர்களை அடையாளங்கண்டு ஊக்குவிக்கிறது. இசைக் கல்லூரி ஆசிரியர்கள் பள்ளி ஆசிரியர்களுடன் தொடர்பு கொண்டு இசையில் ஆர்வமுள்ள மாணவர்களை அத்துறையில் மேல்படிப்புப் படிக்க ஊக்குவிக்கிறார்கள்.

இசையை ஒரு பொழுதுபோக்கு அம்சமாக மட்டுமே கருதாமல் ஒரு வாழ்க்கை முறையாக ஏற்று ஜெர்மானியர்கள் எவ்வளவு சிரத்தையுடன் செயல்படுகிறார்கள் என்பதற்கு உதாரணமாக மற்றும் ஒரு சம்பவம்:

நான் எடுத்துச் சென்றது எலெக்ட்ரானிக் தம்பூராதான். பாரம்பரியத் தம்பூராவுடன் தான் இந்திய இசைக் கலைஞர்கள் பாடுவார்கள், என்பதை அறிந்து, நான் கச்சேரியின் போது உபயோகிப்பதற்காக, இருநூற்றைம்பது மைல் காரில் பிரயாணம் செய்து ஒரு பாரம்பரியத் தம்பூராவைக் கொண்டு வந்து கொடுத்தார்கள். 'எவ்வளவு நேரம் பாடலாம்?' என்று கேட்டபோது — இந்தியாவில் வழக்கமாக ஒரு கச்சேரி எவ்வளவு நேரம் நீடிக்குமோ அவ்வளவு நேரம் பாடலாம் என்றும் கூறி மனம் நெகிழச் செய்தார்கள்.

உ

ஸ்ரீராமஜெயம்

**BADRI TOURISTS**, 249-D, Pocket 'c'
Mayur Vihar, Ph II, New Delhi - 110 091

பத்ரி — கேதார் யாத்திரைகள்

1. நியுடெல்லி - குருக்ஷேத்ரா - நைமியசாரண்யம் - லக்னௌ - அயோத்யா - காசி - கயா - அலகாபாத் - ஆக்ரா - மதுரா - பிருந்தாவனம் - ஜெய்பூர் - புஷ்கர் - அஜ்மீர் - புதுடெல்லி. 14 நாட்கள் @ Rs. 1500/-
புறப்படும் தினம் 1.5.88 to 14.5.88.
2. ரிஷிகேஷ் - தேவ்பிரயாகை - ருத்ரபிரயாகை - ஜோஷிமட் - பத்ரிநாத் - ஹரித்வார் - நியுடெல்லி 7 நாட்கள் @ Rs. 600/-
புறப்படும் தினங்கள் (1) 15.5.88 (2) 28.5.88.
3. ரிஷிகேஷ் - தேவ்பிரயாகை - ருத்ரபிரயாகை - கௌரிகுண்ட் - கேதாரிநாத் - பத்ரிநாத் - ஜோஷிமட் - ஹரித்வார் - நியுடெல்லி. 10 நாட்கள் @ Rs. 750/-
புறப்படும் தினங்கள் (1) 15.5.88 (2) 28.5.88.
4. யமுனோத்ரி - கங்கோத்ரி - கௌமுக் - கேதாரிநாத் - பத்ரிநாத். 18 நாட்கள் @ Rs. 600/- புறப்படும் தினம் 10.6.88.
5. டில்லியிலிருந்து சௌகரியமான பஸ், தங்கும் இடங்கள் (Dormitory) தென்னிந்திய பிராமணர்களால் அங்கங்கு தயாரிக்கப்படும் சுத்தமான ருசியான ஆகாரம் முக்கியமான ஸ்நான கட்டங்கள், பார்க்கும் இடங்கள், யாத்திரை செய்ய விரும்புபவர்கள் கீழ்க்கண்ட முகவரிக்கு D.D. மூலம் பணம் அனுப்பி சீட் ரிசர்வ் செய்து கொள்ளவும்.

**Mrs. Kala Rajan**, B-8/2, M.S. Flats (S.Q), R.K. Puram, Sector 13, New Delhi - 110 066
**Mrs. S. Lakshmi**, 11-A, MTH Road, Villivakkam, Madras - 600 049.

பனாரஸ், பனாரஸ் ஆர்கன்சா, மைசூர் கிரேப்,
கோட்டா, கட்டம், பட்டு சேலைகளும்
புகழ் பெற்ற சேலம் பட்டு வேஷ்டிகள்
பட்டு ஷர்டிங்குகள் வாங்க
சிறந்த நிறுவனம்



"மா மவ மீனாட்சி"

# மீனாட்சி அம்மன் சாரி பாரடைஸ்

23, இரண்டாவது அக்ரஹாரம்
(முதல் மாடி) சேலம்-636 001

 64667, 66506

# வேரில்லாத

நினைக்கவில்லை!

சத்தியமாய் நினைக்கவேயில்லை!

இப்படி பொசுக்கென்று அம்மா போய் விடுவார் என்று சற்றும் எதிர்பார்க்கவே யில்லை.

சாவு எல்லோருக்குமே சர்வநிச்சயமான ஒன்றுதான் —

தெரியும் — நன்றாகத் தெரியும்.

ஆனாலும் எப்போது, எங்கே, எவ்வாறு என்பதெல்லாம் யாராலும் கணிக்க முடிவ தில்லை என்பது நிஜம்தானே?

இப்போதோ, அப்போதோ என்று பயந்து பயந்து இருந்தபோது, 'போ — எனக்கு நீ வேண்டாம்' என்று ஒதுங்கி வேடிக்கை காட்டிவிட்டு, கொஞ்சம்கூட எதிர்பாராது விஸ்ராந்தியாய் உட்கார்ந்திருக்கையில் தடக் கென்று வாரிக் கொண்டு போய்விடும் போது நடப்பதை லவலேசமும் நம்ப முடியா மல்தான் போகிறது.

"சும்மா சொல்லக்கூடாது — நினைவு தெரிந்த நாளிலிருந்து அம்மாவுக்குக் கெட்டி உடம்புதான்.

சாதாரணமாய் ஆடிக்கொருதரம், அமா வாசைக்கொருதரம் என்று தலைவலி, ஜல தோஷம் என்று எல்லோரையும் படுத்துவது கூட அம்மாவுக்கு வந்ததில்லையாதலால், போன ஐந்தாம் மாசம் 'ஹார்ட் அட்டாக்' வந்து ஆஸ்பத்திரியில் படுத்திருந்தபோது கூட, எசகுபிசகாய் ஏதாவது ஆகக்கூடும் என்று தோன்றவேயில்லை.

என்னவோ சொல்லத் தெரியாமல் பய மாக இருந்ததே தவிர, இந்த இறப்பு பயம் நிழலாகக்கூட மனத்தில் பதியவில்லையே!

கிட்டத்தட்ட மூன்று வாரங்கள்போல ஆஸ்பத்திரியில் தங்கவேண்டி வந்தாலும், வீடு திரும்பிய பிறகு நல்ல தேக ஆரோக் கியத்தின் காரணமாய் உடம்பு சடசட வென்று தேறிவிட்டதில், இருதயத்தைப்



# மரங்கள்



பற்றிய பிரக்ஞையேகூட அற்றுப்போய் விட்டதில், உறக்கத்திலேயே அம்மா போய் விட்டார் என்கிற சேதி, இடியாகத் தலையில் இறங்கினதில் அதிசயம் என்ன?

இப்படி நடக்கும் என்று கனவிலும் எதிர் பார்க்கவில்லைதான்!

எதிர்பார்த்திருந்தால், 'என் பேரனை எப்படா கண்ணுல காட்டப்போறே தம்பி...?' என்று அம்மா புலம்பின புலம்பலுக்கெல்லாம் மதிப்புக் கொடுத்து, எப்பாடுபட்டாவது குழந்தையை அம்மாவின் கையில் தவழ விட்டு, 'ஆசைதீரக் கொஞ்சும்மா' என்று சொல்லியிருக்கலாமே!

குழந்தையைத் தொட்டிலில் இட்டு, ஊர் முழுவதும் அழைத்து அமர்க்களப்படுத்த வேண்டும் என்று அம்மா ஆசைப்பட்டதைத் தடபுடலாய் நிறைவேற்றியிருக்கலாமே!

அம்மாதான் என்னென்ன ஆசைப்பட்டாள்!



மருமகளுக்கு வளை அடுக்க வேண்டும்; பேரனுக்குக் குலதெய்வத்தின் பேர் வைக்க வேண்டும்; ஊர் மூக்கில் விரலை வைக்கிற தினுசில் தொட்டில் போட வேண்டும்; பதினோராம் மாசம் ஸ்வாமிமலைக்கு அழைத்துப் போய்க் குழந்தைக்கு மொட்டை போட வேண்டும் —

அப்புறம், அப்புறம்...

கடைசியில் ஒன்றுகூட நடக்காமல்...

ஹூம்...

தொட்டில் போட்டால், ஞானஸ்நானமும் செய்ய வேண்டும் என்ற பேரத்தில், ஒன்றையுமே செய்யாமல் விட்டாயிற்று.

'குழந்தைக்கு ஒரே காய்ச்சலா இருக்கும்மா, 'இப்ப தலைக்குத் தண்ணி ஊத்தித் தொட்டில் கிட்டில்னு போட வேணும், உடம்பு நல்லா தேர்ற வரைக்கும் குழந்தையக் கசக்காம ஜாக்கிரதையாக் கவனிக்கணும்னு டாக்டர் அடிச்சுச் சொல்லி இருக்காரு...' என்று சம்பந்தா சம்பந்தம் இல்லாமல் நீளமாய்ப் பொய் சொல்லிச் சமாளித்தபோது கூட,

'அதனால என்ன தம்பி! இப்ப இல்லாட்டி, மூணும் மாசம் தொட்டில் போட்டுக்கிட்டா போச்சு! குழந்தை நல்லா தெம்பா இருக்கிறதுல்ல முக்கியம்!' என்றல்லவா பெருந்தன்மையோடு சொன்னார்!

மூன்றும் மாசம் வருகிறதே, அடுத்ததாக என்ன சாக்குப்போக்கு சொல்லலாம் என்று இன்னும் யோசித்துக்கூட முடியவில்லை, அதற்குள், 'எனக்காக நீ மேலே மேலே பொய் சொல்லி அவஸ்தைப்படாதே' என்கிற மாதிரி போய்ச் சேர்ந்து விட்டாரே!

உயிரோடு இருந்தபோது, 'காட்டு... காட்டு' என்று சொன்ன பேரனை, அம்மா இறந்தபோது அல்லவா தூக்கிக் கொண்டு ஓடும்படி ஆயிற்று!

அந்தப் புதன்கிழமை காலை பாங்கினுள் நுழைந்ததும் நுழையாததுமாய், காஞ்சிபுரத்திலிருந்து வந்த போன், 'தூக்கத்திலேயே இரண்டாவது ஹார்ட் அட்டாக் வந்து அம்மா போய்விட்டார்' என்ற செய்தியைத் தெரிவித்ததும், அலறி அடித்துக் கொண்டு ஓடியபோது வசந்தாவும் குழந்தையுடன் உடன் வந்தாள்.

கைக்குழந்தையையும் தூக்கிக் கொண்டு அவள் வரத்தான் வேண்டுமா என்று ஒரு விநாடி யோசித்தபோது, சற்றும் தயங்காமல், 'இப்ப எதப்பத்தியும் யோசிக்க வேணும்

சிவசங்கரி

மாது.... நான் அங்க வரத்தான் செய்வேன்' என்று பிடிவாதமாய்க் கிளம்பி வந்தாள்.

திருமணமானதிலிருந்து ஒரே ஒரு முறை தான் பார்த்திருக்கிறாள் என்றாலும், ஏதோ ரொம்ப காலம் பழகியவள் போல் துக்கம் தாளாமல் கண்கலங்கியபடி உறவினர் மத்தியில் கிராமத்தில் நின்றாள்.

பச்சை உடம்பு என்பதையும் பாராட்டாமல், பசி தூக்கத்தை மறந்து, காரியங்களை இழுத்துப் போட்டுக் கொண்டு செய்து, என் மாமியார் வீட்டுக் காரியங்களை நான் செய்கிறேன் என்று உரிமையோடு வளைய வந்தாள்.

ஆனால், ஊரும் உறவும்தான் அவளைச் சரியாகப் புரிந்து கொள்ளாமல் நோகப் பண்ணிவிட்டது.

யாரோ தோளில் தட்டுவதை உணர்ந்து மாதவன் திடுக்கிட்டு நிமிர்ந்தான்.

'என்ன மாதவன், ரொம்ப நேரமா இப்படியே உக்காந்திருக்கீங்க? சாப்பிட வரலே? லஞ்ச் டைம் துவங்கிப் பத்து நிமிஷத்துக்கு மேலாவுது...

உடன் வேலை பார்க்கும் மோகனின் கேள்விக்குப் பதில் சொல்லாமல் தலை குனிந்தவன், சில கணங்களுக்குப் பின் மெதுவாக நிமிர்ந்தான்.

''எனக்குப் பசிக்கல மோகன்... நீங்க போய்ச் சாப்பிடுங்க...''

மோகன் மெதுவாய்த் தோளைத் தட்டிக் கொடுத்தான்.

''மனசு சரியில்லியா மாதவன்? என்ன பண்றது... அம்மா போய் இன்னும் இருபது நாளுகூட ஆகலே இல்லே, அதான் நினைப்பு சுத்திச்சுத்தி வருது... தைரியமா இருங்க... ஹூம், போறவங்க போயிடறாங்க, இருக்கறவங்களுக்குத்தான் வேதனை! என்ன செய்றது, மனசத் தேத்திக்கிட்டுச் சாப்பிட வாங்க!''

மேற்கொண்டு இரண்டு நிமிஷங்கள் போல் அங்கேயே நின்றவன், மாதவன் அசையாமலே இருப்பதைப் பார்த்து, ''சாப்பிடப் பிடிக்கலைனா வேணாம்... ஆனால் பழசையே நினைச்சுக்கிட்டு இருக்காதீங்க... நா சாப்பிட்டு வர்றப்ப உங்களுக்குக் காப்பி வாங்கிட்டு வர்றேன்...'' என்று சொல்லி விட்டுப் போனான்.

'போகிறவர்கள் போய்விடுகிறார்கள், இருப்பவர்களுக்குத்தான் வேதனை...' எத்தனை வாஸ்தவமான வார்த்தைகள்!

மனிதர்களின் மனத்தைக் காயப்படுத்துபவர்களுக்கு இதெல்லாம் புரிகிறதா என்ன!

புரிந்திருந்தால் வசந்தாவின் மனத்தை அப்படி நோகச் செய்திருப்பார்களா!

முதல் இரண்டு நாளுக்கு எந்த விஷயமுமே காதில் விழவோ, புத்திக்கு எட்டவோ இல்லைதான்...

அம்மாவுக்காக அழுது, பின், சுடுகாட்டில் கொண்டுபோய் அவரைத் தகனம் பண்ணிவிட்டு வந்து மறுபடி அழுது... மூளையில் துக்கம் மட்டுமே தங்கியிருக்க, வேறு எதுவுமே உறைக்காமல்தான் போனது.

அதனால்தான், முதலிரண்டு நாளும் கூடவே இருந்தவள், மூன்றாம் நாள் 'பால்' விடப் புறப்படும்வரை கண்ணிலேயே படாததோ, பிறகு சடங்கு முடிந்து திரும்பி வந்தும் கூடப் பார்க்க முடியாமல் போனதோ தவறாகவே தோன்றவில்லை.

நான்காம் நாள், துக்கத்தின் சாயல் சிறிது குறைந்து வீட்டுக்குள் நிதானமாய் நடந்தபோது, வசந்தா கொல்லைத் தாழ்வாரத்தில் அமர்ந்து குழந்தைக்குப் பால் கொடுத்துக் கொண்டிருப்பது தெரிந்தது.

'என்ன வசு, இங்க உக்காந்திருக்கே?' என்று கேட்டதற்கு, ஏதோ சொல்லி மழுப்பினாள்.

அரை நிமிஷம் மௌனித்து, இப்படியும் அப்படியும் பார்த்து, அருகில் யாரும் இல்லை என்பதை ஊர்ஜிதப்படுத்திக் கொண்டவள், தழைந்த குரலில், தலையை நிமிர்த்தாமலேயே பேசினாள்.

'நா மெட்ராஸ் போயிறட்டுமா? நீங்க தங்கி, காரியங்களை முடிச்சிட்டு வர்றீங்களா?' கண்கள் நீரின் துளிர்ப்பில் பளபளக்கப் பேசியபோது, முதலில் புரியத்தான் இல்லை.

'குழந்தைய வெச்சுக்கிட்டு இங்க இருக்கற சிரமம் கூடப் பெரிசா தெரியல, ஆனா, கைபட்டா குத்தம், கால் பட்டா பாவம்னு சொல்றவங்க நடுவுல வேண்டாத விருந்தாளியா வளைய வர்றது துன்பமா இருக்கு... தயவு செஞ்சு என்னையும் என் புள்ளையையும் மெட்ராஸ்ல கொண்டுபோய் விட்டுறுங்க... ப்ளீஸ்' என்று மீண்டும் கொஞ்சம் உறுதியான த்வனியில் பேசிய பிறகே, 'ஓஹோ, என்னமோ விஷயம் நடந்திருக்கிறது! இவள் எதனாலோ மனம் நொந்திருக்கிறாள்' என்று சன்னமாய் உள்ளுக்குள் மின்னியது.

முரண்டிக்கொண்டு நிற்காமல் அவளையும் குழந்தையையும் சென்னையில் கொண்டு விட்டுவிட்டு, அன்று இரவே மறுபடியும் காஞ்சிபுரம் திரும்புவதற்குள் முழுவதுமாக விஷயம் புரிந்து போயிற்று...

அம்மாவின் இறப்பைக் காரணம் காட்டி வந்திருந்த பெரியம்மாவுக்கும் மற்ற உறவினர்களுக்கும், இந்தத் துக்க சந்தர்ப்பத்திலும்கூட வசந்தாவின் குலம் கோத்திரம்தான் நினைவுக்கு வந்திருக்கின்றன.

தகனத்துக்காக ஆண்கள் சுடுகாட்டுக்குக் கிளம்பிப்போன உடனேயே, வீட்டுப் பெண்களின் பார்வை வசந்தா மீது விழுந்து விட்டிருக்கிறது...

'ஒரே புள்ளைனு அருமையா வளத்தா...



அவனுக்கு இவ அருமை புரியலியே!' என்றார்களாம்.

'நம்ப சாதி சனத்துல பொண்ணு இல்லே? இப்படி வேத்து சாதில போய் மகன் கட்டிக்கிட்டு வந்துட்டானேனு அவளுக்கு ஒரே குறை... அந்தக் குறையேதான் அவளைச் சாகடிச்சிடுச்சு!' என்றார்களாம்.

'கொள்ளி போடப் புள்ள வேணும்னு தவமான தவம் செய்தா.... இருந்த வரைக்கும் அவளைத் துடிக்க வச்சிட்டு அப்பால கொள்ளி என்ன கொள்ளி! புள்ள என்ன பெரிய்ய புள்ள! இவன் கொள்ளி போட்டா. அவ நெஞ்சு வேகுமா?' என்றார்களாம்.

'தீவிர சைவமா இருந்து, ஆசாரமா வாழ்ந்த குடும்பம்.... இப்ப சமையக்கட்டுக்குள்ள எவ எவளோ நுழையறாளே — இது தெய்வத்துக்கு அடுக்குமா! பேசாம நாம வெளில போயிட வேண்டியதுதான்...' என்றார்களாம்.

இன்னும் என்னென்னவோ சொன்னார்கள் என்று தெரிந்தபோது கோபமும் ஆத்திரமும் குதறிக்கொண்டு வெளிப்பட்டன.

'அவங்க என்ன இப்படிப் பேசறது? அது எங்க வீடு, நா எம்பொண்டாட்டியக் கூட்டிக்கிட்டு வருவேன், போவேன்... இவங்களுக்கென்ன? நீ வா என்கூட, அவங்கள ஒரு கை பாக்கறேன்...' என்று ஒரு வேகத்தில் சொன்னபோது, வசந்தா தடுத்து விட்டாள்.

'வேணும் விட்டுருங்க... இத்தனை வருஷமா உங்க குடும்பத்தோட தொடர்பு வெச்சிக்கிட்டு, நல்ல உறவோடப் பழகிட்டு இருக்கறவங்க... இப்பக்கூட உங்கம்மா காரியங்கள அவங்கதான் சம்பிரதாயம் தவறாம கவனிச்சுக்கறாங்க.. ஊர்ப் பெரியவங்களைப் பகைச்சுக்கிட்டு உங்கம்மா காரியங்களைத் தடுத்த பாவம் எனக்கு வேணாம்... விடுங்க. போறுத காலம்... அனுபவிக்கிறோம்.... அனாவசியமா இப்ப அவங்ககிட்ட சண்டை போட்டுக்காதீங்க...

அந்தச் சந்தர்ப்பத்தில், அம்மாவின் இழப்பு மட்டுமே பூதாகாரமாய்ப் பாதித்த அந்த நேரத்தில், வேறு எதைப்பற்றியும் நினைக்கத் தோன்றவில்லைதான் — வேறு எதுவும் முக்கியமாய்ப் படவில்லைதான்.

அதனாலேயே, வசந்தாவின் வார்த்தைக்கு மறுவார்த்தை பேசாமல், அவளையும் குழந்தையையும் சென்னையில் விட்டுவிட்டு ஊருக்குப்போய் அம்மாவின் பதினாறும் நாள் காரியங்களைக் கவனிப்பது சாத்தியமாயிற்று.

எல்லாம் முடிந்து, எண்ணெய் தேய்த்து ஒருவழியாய்த் தலை முழுகியாயிற்று.

சுமந்து, பெற்று, வளர்த்தவளுக்காக அழக்கூட இவ்வளவுதான் நேரம் என்கிற மாதிரி ஆபீஸ் லீவு கட்டுப்படுத்த, உடனடியாய்த் திரும்பி வந்து பழையபடி வேலைகளை ஆரம்பித்தாயிற்று.

இனி அம்மாவை நினைக்கக்கூட....

மாதவன், இன்னுமா அப்படியே உக்காந்திருக்கீங்க? இந்தக் காப்பியக் குடிச்சிட்டுப்போய் முகத்தக் கழுவிக்கிட்டு வாங்க... ஏற்கெனவே மேனேஜர் ரெண்டு தரம் உங்களைக் கவனிச்சுக்கிட்டே இந்த வழியா போனாரு... கமான், எழுந்திருங்க...'

மோகன் கொண்டு வந்த காப்பியை வேண்டா வெறுப்பாகக் குடிக்கையில், வெறும் கழுநீராகக் கசந்த அதன் சுவை முகத்தை மேலும் சுளிக்க வைத்தது.

ஒன்றிரண்டு வேளைகள்கூட இப்படி ஓட்டல் காப்பியைக் குடிக்க முடியாதபடி வீட்டுக் காப்பிக்காக நாக்கு ஏங்க ஆரம்பித்து விட்டதே. அம்மா கையாலேயே சாப்பிட்டுச் சாப்பிட்டுப் பழக்கமான அப்பா இனிமேல் என்ன செய்யப் போகிறார்?

எங்கிருந்தோ, இழவுக்காக வந்திருக்கும் பெரியம்மாவும், அத்தையும், சித்தியும் இன்றோ நாளையோ கிளம்பி விடுவார்கள்.

தினம் ஒருவராய் வந்து துக்கம் விசாரிப்பவர்களின் வருகை நாளாவட்டத்தில் குறைந்துவிடும்.

அப்புறம்?

மனிதர்களின் பேச்சும், நடமாட்டமும் குறைந்த பின், அந்தப் பெரிய வீட்டில் தன்னந்தனியாக அப்பா எப்படி இருக்கப் போகிறார்?

எந்நேரமும் நாலு பேருக்காவது இலை போடப்பட்டு, சமையலும் சாப்பாடுமாய்ப் பந்தி நடந்து, மாடும் கன்றும், தோட்டமும் துரவுமாய்ச் சுபிட்சமாய் இருந்த வீடு —

இப்போது எப்படி இருக்கும்?

என்னமோ, அம்மாவின் கையில்தான் இத்தனைக்கும் காரணமான நூல்கள் கட்டப்பட்டு, அவர் மட்டுமே இத்தனை பேரையும் இத்தனை விஷயங்களையும் பொம்மலாட்டமாய் ஆட்டி வைத்த மாதிரி — இப்போது நூல் மொத்தமும் அறுந்து திசைக்கொன்றாய்த் தொங்குகிற மாதிரி...

'ஹோ'வென்ற அந்த வீட்டில் அப்பா மட்டும் எப்படி இருக்கப்....

மதியச் சாப்பாட்டுக்குப் பிறகு வேலைகள் தொடர்ந்து சுறுசுறுப்பாய் இயங்குவதில் எழுந்த டைப்ரைட்டர் சப்தம் சிந்தனையைக் கலைக்க, வலுக்கட்டாயமாய்த் தன்னை உலுக்கிக்கொண்ட மாதவன் எழுந்து, முகம் கழுவிக்கொண்டு, மிகுந்த பிரயாசையுடன் மேஜையில் இருந்த பைல்களில் ஒன்றைக் கையில் பிரித்து வைத்துக் கொண்டான்.

(தொடரும்)

அவர்: மீட்டருக்கு மேல அறுபத்தியெட்டு ரூபாய் கொடு, இல்லேன்னு அறுபத்தியெட்டு தடவை மன்னிப்புக் கேள்'ன்னு சொல்லுறியே! நான் அப்படி என்ன தவறு செய்தேன்?

ஆட்டோ'டிரைவர்: வரும் வழியில், 'ஆட்டோவை விட மீட்டர் வேகமா ஓடுது'ன்னு அறுபத்தியெட்டு தடவை சொன்னீங்களே!

— மணியன் தர்மலிங்கம்.

டெலிபோனை வைத்ததும் மீண்டும் அடித்தது. பேசிப் பேசித் தொண்டை வறண்டு போனது. "யெஸ் ஸார்...", "மூணு மணிக்கு ஜி.எம்.மைப் பார்க்கணுமா? ஓ.கே. ஹி இஸ் ஃப்ரீ..." என்று மாறி மாறிச் சொல்லி உள்நாக்கில் எரிச்சல் ஏற்பட்டிருந்தது.

தண்ணீர் குடிக்கலாம் என்று எழுந்த போது அந்தக் குரல்... அழுத்தமாய், கம்பீரமாய் நெஞ்சைத் தொடுகிற மாதிரி கேட்டது.

"எக்ஸ்க்யூஸ் மீ மேடம்..."

திடமான உடல், சுருட்டை முடி, பெரிய நெற்றி, தடித்த உதடு, சின்ன கண்கள், கறுப்பு நிறம், நிஜமான முகத்தோடு அவன் நின்றிருந்தான்.

"வாட் கேன் ஐ டு ஃபார் யூ ஸார்...?"

அவன் தொண்டையை லேசாய்ச் செருமிக் கொண்டு ஆங்கிலத்தில் சொன்னான்.

"நான் ஆப்பிரிக்காவிலிருந்து வருகிறேன். பெயர் ஜேம்ஸ். ஜி.எம்.மைப் பார்க்க வேண்டும்."

"ஒரு நிமிஷம்."

எதிரிலிருந்த சோபாவில் உட்கார்ந்து கொண்டான்.

தாரிணி ஜி.எம்.மோடு தொடர்பு கொண்ட போது 'அவனை அனுப்பி வை' என்றார்.

"உள்ளே போங்க மிஸ்டர் ஜேம்ஸ். உங்களைக் கூப்பிடுகிறார்."

அதைப் பார்த்துச் சிரிப்பார்கள். ஸ்டீபன் கூட சினிமாவுக்குப் போவார்கள்.

"நீங்களும் வாங்களேன் தாரிணி... நான், கலா, சுகந்தி சினிமா போறோம்."

எப்படியும் இவளை மடக்கி விடலாம் என்கிற நினைப்பு. 'ரிசப்ஷனிஸ்ட்தானே' என்கிற அலட்சிய எண்ணம். ஓங்கி அறைந்து விடலாம். ஆனால்... ஸ்டீபன் ஜி.எம்.முக்கு வேண்டியவன். நாளைக்கே வத்தி வைத்தால், வேலை போகும் ஆபத்து இருக்கிறது. ஆஸ்துமாவில் மூச்சிரைக்கும் அம்மாவையும், 'க்கா... இன்னிக்கு முந்நூறு ரூபா பீஸ் கட்டணும். இருக்கா?' என்று குடும்ப நிலையைப் புரிந்து கொண்டு தயக்கமாய்க் கேட்கும் தம்பியையும் உடைய நடுத்தர வர்க்கத்துப் பெண். வேலை பறிபோவதைக் கவலையில்லாமல் ஏற்றுக் கொள்ள முடியாது.

ஸ்டீபன் இதெல்லாம் தெரிந்து கொண்டு தான் விளையாடுகிறான்.

"ஏன் இப்படி ஒதுங்கி ஒதுங்கிப் போறீங்க தாரிணி... இந்த வயசுலதான் 'என்ஜாய்' பண்ணணும்."

அந்த 'என்ஜாயில்' ஆபாசம் இருக்கும். தாரிணியால் எதிர்க்க முடியாது என்ற கர்வம் அடங்கியிருக்கும்.

"தாரிணியை மடக்காம விட மாட்டேன்" என்று வேறு உறுதிமொழி ஸ்டீபன் எடுத்திருப்பதாய் ஆபீஸில் பேச்சு.

தாரிணிக்கு இதை நினைத்தால் சில சமயம்

## தமயந்தி

"தாங்க்யூ."

மனம் சிலிர்த்துப் போனது அந்த 'தாங்க்யூ'வில். இதுவரை எவரும் நன்றி சொன்னதில்லை. 'ஜி. எம். இருக்கிறாரா' என்று கேட்டதும், இருக்கிறார் என்று சொன்னால் கதவைத் திறந்து கொண்டு உள்ளே போவார்கள். இல்லையென்று சொன்னால் முகம் சுளித்துக் கொண்டு வெளியேறுவார்கள்.

இந்த 'தாங்க்யூ' புதிது. மனத்தின் அடித்தளத்திலிருந்து வருவது. நண்பன் சொல்லும் நன்றி விரும்பப்படாத ஒன்று. உரிமை இருக்கும் போது நன்றி உறவின் பலத்தைக் கெடுத்துவிடும்.

ஆனால் இவன் அந்நியன். அந்நியர் சொல்லும் நன்றி பரவசத்தைத் தருவது நிஜம். அதிலும் இவன் சொன்ன நன்றியில் நிஜமான உணர்வு இருக்கிறது. உணர்ந்து சொல்கிறான். சாயம் கலக்காத நிஜம்.

"தாரிணி டீ குடிக்கப் போறேன்... வர்றீங்களா?"

ஸ்டீபன் தன் செக்ஷன் கவுண்டரை மூடிக் கொண்டே கேட்டான்.

"இல்லை... நான் வரலை."

ஏமாற்றம் கண்ணில் பளிச்சிட நகர்ந்தான். ஸ்டீபனின் கண்ணில் எப்போதும் கெட்ட எண்ணம் இருக்கும். மேஜைக்கடியில் வைத்து, பிளாட்பாரத்தில் வாங்கிய மலிவுவிலை ஆபாசப் பத்திரிகையைக் காட்டுவான். டெபாஸிட் செக்ஷன் கலாவும், சுகந்தியும் கோபத்தை மீறிக் கொண்டு சிரிப்பு வரும். அது என்ன கணக்கு? இளம் வயசில் காதலிக்க வேண்டும், ஊர் சுற்ற வேண்டும் என்று ஏதாவது சட்டமா? காதலையும் காமத்தையும் தவிர வேறு விஷயங்கள் பெரிசாய்ப் படக்கூடாதா?

ஜி.எம்., ஜேம்ஸுடன் தம் அறையை விட்டு வெளியே வந்து ஆபீஸ் ஊழியர்களைக் கூட்டினார்.

"இவர் ஜேம்ஸ், ஆப்ரிக்காவிலிருந்து வந்திருக்கிறார். கொஞ்சம் காஸெட்ஸ் கொண்டு வந்திருக்கிறார். அதை விற்று வரும் பணத்தில் ஆப்பிரிக்காவில் வறட்சியாலும் இனப் போராலும் பாதிக்கப்பட்டுள்ளவர்களுக்கு உதவப் போகிறார். அதனால்... நீங்களும் அவற்றை வாங்கி இவருக்கு உதவுங்கள்."

ஜேம்ஸ் சிநேகமாய் எல்லோரையும் பார்த்துப் புன்னகை செய்தான். ஜி.எம். தம் பங்கிற்கு ஒரு காஸெட்டை வாங்கிக் கொண்டு தம் ஏ.ஸி. அறைக்குள் சென்று புகுந்து கொண்டார்.

அவர் போனதும், ஸ்டீபன் பெரிய மனுஷத்தனத்தோடு முன்னால் வந்தான்.

"ஒரு காஸெட் எவ்வளவு விலை?"

"ஐம்பது ரூபாய் ஸார்... வாங்குகிறீர்களா?"

"ஜாஸ்தி..."

ஜேம்ஸ் ஸ்டீபனை ஆழமாய்ப் பார்த்தான்.

அந்தப் பார்வை நெஞ்சு வரை பாயக் கூடியது. 'நண்பா' என்று மனசின் தோள் தொட்டு அணைக்கும் சக்தி உடையது.

''அதிகம்தான் ஸார்... ஒத்துக் கொள்கிறேன். ஆனால் நீங்கள் கொடுக்கும் ஒவ்வொரு பைசாவும் ஆப்பிரிக்காவில் உள்ள ஓர் ஆத்மாவின் பசியைப் போக்கும். மானத்தைப் பாதுகாக்கும். என்ன விலை என்பது பெரிதில்லை ஸார். எவ்வளவு பலன் என்பதே பெரிது.''

தாரிணிக்கு நெஞ்சில் சிலீர் என்று என்னமோ குளிர்ச்சியாய்ப் பரவியது. ஜேம்ஸ் அவள் வாங்குவாள் என்ற நம்பிக்கையில் அவளைப் பார்த்தான்.

''நீங்கள் வாங்குகிறீர்களா மேடம்?''

நானா? பதினைந்தாம் தேதியே வாங்கும் சம்பளம் தீர்ந்து போய், பாதி நாள் பஸ்ஸிற்குக் கொடுக்கக் காசு இல்லாமல் ஆபீஸுக்கு நடந்து வரும் நானா? 'வாங்க வேண்டும்... எங்கோ தவிக்கும் ஜீவனுக்கு உதவ வேண்டும்' என்ற தவிப்பு என்னுள் இல்லாமல் இல்லை, 'எவ்வளவு பலன் என்பதே பெரிது' என்பது புரியாமல் இல்லை... ஆனாலும்... முடியாது...

''ஸாரி மிஸ்டர் ஜேம்ஸ்... அடுத்த தடவை வாங்கிக் கொள்கிறேன்.''

கலா லிப்ஸ்டிக் உதடுகளை ஒத்திக் கொண்டே ஜேம்ஸைப் பார்த்தாள்.

''அதெல்லாம் சரி... இதெல்லாம் என்ன பாட்டு?''

''நீங்களே கேளுங்கள் மேடம்.''

தன்னுடன் வைத்திருந்த சின்ன ரெக்கார்டரில் டேப்பை ஜேம்ஸ் நுழைத்தான். 'We are the world... we are the children' என்ற ஆப்பிரிக்கர்களின் விடுதலைக்காக, சம உரிமைக்காக முழங்கிய கம்பீரமான குரல்கள் அறையை நிறைத்தன.

ஸ்டீபன் பெரிய மனுஷத்தனத்தோடு தாரிணியை இளக்காரமாய்ப் பார்த்துக் கொண்டே ஜேம்ஸிடம் ரூபாயை நீட்டினான்.

''எனக்கொன்று 'பாக்' செய்து விடுங்கள். தாரிணி, உங்களுக்கும் ஒரு காஸெட் வாங்கவா? ஐ ஹேவ் மனி...''

'ஐ ஹேவ் மனி... என்னிடம் காசிருக்கிறது.'

காசுக்கு விலை போய் விடுவாள் என்று நினைக்கிறானா?

''இல்லை... வேணாம்.''

ஜேம்ஸ் ஸ்டீபனிடம் காஸெட்டை 'பாக்' செய்து கொடுத்தான்.

''உங்கள் வீட்டில் இந்த காஸெட் நல்லாசிகளைத் தரும் ஸார்.''

''காஸெட் வாங்குவது நல்லாசியில்லை மிஸ்டர் ஜேம்ஸ். இது வியாபாரம்.''

ஸ்டீபனின் குரலில் திமிர் இருந்தது. ஜேம்ஸின் கறுத்த முகத்தில் அவனால் ஏற்பட்ட காயத்தின் எதிரொலி தெரிந்தது.

''வாழ்த்துச் சொன்னது தப்பா ஸார்?''

''என் வீட்டில் ஆசி இருக்கிறது. சந்தோஷம் இருக்கிறது. உங்கள் வாழ்த்தால் பயனில்லை. ஆசியையும், வாழ்த்தையும் குழப்பமுள்ள உங்கள் நாட்டுக்கே சொல்லுங்கள்.''

''ஒத்துக் கொள்கிறேன் ஸார்... எங்கள் நாட்டில் குழப்பம் இருக்கிறது. வறட்சி, இனவேற்றுமை உள்ளது. அதை நீக்கத்தான் இந்த விற்பனை.''

''போதும் சால்ஜாப்பு.''

மேன்மேலும் பேச்சு வளர, ஜேம்ஸ் காயப்பட்டான். என்ன பேசுவது என்று தெரியாமல் தவித்தான். தாரிணியைச் சங்கடமாய்ப் பார்த்தான்.

கடைசியில் ''நான் கிளம்புகிறேன்'' என்று சொல்லிவிட்டு அவன் தன் பையில் காஸெட்டுகளை அடுக்கிக் கொள்ள, எல்லோரும் அவரவர் இடத்திற்கு ஓர் அந்நிய தேசத்துக்காரனை 'ஒடுக்கி' விட்ட திருப்தியில் போய் உட்கார்ந்தார்கள்.

தாரிணி மலைப்பாய் நின்றாள். ஒரு மனிதனை நோகடிப்பதில் அப்படி என்ன திருப்தி? திருப்தியில்லை இது. மற்றவர்கள் முன்னால் தன் பலத்தைக் காட்டக் கூடிய ஒரு சந்தர்ப்பம். ''நான் பலசாலி.'' என்று பறைசாற்றும் தீரம். கோழைத் தீரம்.

''மிஸ்...''

யாரோ கூப்பிடுவது போலிருந்தது. மனம், நடந்து போன சம்பவத்தினால் உறைந்து போய்க்கிடக்க, எங்கோ குரல் ஒலிப்பது போல் பிரமை.

''மிஸ்...''

தாரிணி சுதாரித்துக் கொண்டாள்.

ஜேம்ஸ்.

''என்ன வேண்டும் மிஸ்டர் ஜேம்ஸ்?''

''ஜி.எம்.மிடம் நான் போய் வருகிறேன் என்று சொல்ல வேண்டும். உள்ளே போகலாமா?''

எத்தனை பேருக்கு வரும் இந்தக் குணம்? வேலை முடிந்ததும் ஓடிவிடத் துடிக்கும் வாடிக்கையாளர்கள்... இவன் அவர்களில் ஒருவனில்லை.

''ஓ யெஸ். போங்கள். அவர் ஃப்ரீதான்.''

அவன் உள்ளே போய் வரும் வரை காத்திருந்தாள். வெளியே வந்ததும் தாரிணியைப் பார்த்துச் சிரித்தான்.

''வருகிறேன் மேடம். மிக்க நன்றி.''

''ஒரு நிமிஷம்...''

''என்ன மேடம்?''

பிரமுகர்: இவ்வளவு புத்திசாலியான நீங்க எப்படி ரெண்டாம் கிளாஸ்லே ஃபெயில் ஆனீங்க?

அமைச்சர்: இப்போன்னு பாஸ் பண்ணிடுவேன்; அப்போ எனக்கு அவ்வளவு விவரம் போதாது!

— கடுவை கோபால்சாமி.



இப்பொழுது விற்பனையாகிறது...

நாவல்

# சத்யா



இதழுடன்
எம்.ஜி.ஆர்
திரைப்பட
ஆல்பம்
இலவசம்!

விலை ரூ.3/

## ராஜேஷ்குமாரின் உன்னைத் தா! உன் உயிரைத் தா! பரபரப்பான முழு நாவல்!

விபரங்களுக்கு:
சந்திரா, பார்வதி
பப்ளிகேஷன்ஸ், 13, [illegible]
முதலி தெரு,
சென்னை-1

வாசகர் பங்கு:

# தளபதி திடமதி.



## பரிசு ரூ. 400!

உள்நாட்டு நிகழ்ச்சிகள் முதல் அகில உலகப் பிரச்னைகள் வரை நமது ஆஸ்தான ஜோக்கர் விட் அடிப்பார்! மேடைப் பேச்சாகவோ அல்லது உரையாடலாகவோ அறிவுக்கொழுந்தான கருத்தாக என்ன சொல்வார் என்பதைத்தான் கீழே உள்ள கூப்பனில் நீங்கள் எழுதி அனுப்ப வேண்டும். முதல் முறையாக உங்கள் துணுக்கு பிரசுரமாகும்போது பரிசு ரூ. 25/-. ஒருவரே எழுதிய சில துணுக்குகள் அடுத்து வரும் பல இதழ்களில் பிரசுரமானால் ஒவ்வொரு முறையும் பரிசு இரட்டிப்பாகும்! அதிகபட்சப் பரிசு ரூ. 400/-. எங்கே, உங்கள் ஜோக் ஆற்றலைக் காட்டுங்கள் பார்க்கலாம்! உறை மீது மறவாமல், "தளபதி திடமதி" என்று குறிப்பிடவும்.

கூப்பன்:

கல்கி இதழ் 7.2.88 — முடிவு தேதி: 16.2.88.

தளபதி திடமதி: "..........................................

..........................................

..........................................

..........................................

..........................................

..........................................

..........................................

..........................................

..........................................

..........................................

..........................................

.........................................."

என் பெயர்: ..........................................

விலாசம்: ..........................................

..........................................

"என் கூட... என் கூட... 'காண்டீனுக்கு வர முடியுமா?"

"ஓ யெஸ்."

காண்டீன் வரை அமைதியாய் நடந்து எதிரெதிரே உட்கார்ந்து கொண்டார்கள்.

"என்ன சாப்பிடுகிறீர்கள்?"

"உங்கள் ஊர் சாப்பாடு எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது மிஸ்..."

"தாரிணி.."

"அழகான பெயர்! எதை வேண்டுமானாலும் ஆர்டர் கொடுங்கள் மிஸ். தாரிணி. எனக்கு உங்கள் சாப்பாடு எதுவும் பிடிக்கும்."

'உங்கள் ஊர்' என்று புகழும் நேர்த்தி. மனசைத் தொடும் நட்பு... இது ஏன் ஸ்மைலனுக்குப் புரியவில்லை?

சமோசா: காப்பிக்கு ஆர்டர் கொடுத்தாள். ஜேம்ஸ் எடுத்துத் திருப்பித் திருப்பிப் பார்த்தான்.

"ரொம்ப ருசியாய் இருக்கிறது. பெயர் என்ன?"

"சமோசா."

"டம்டா.." என்று அதை உச்சரிக்கக் கஷ்டப்பட்டு, கடைசியில் தன் தோல்வியை ஒத்துக் கொண்டு சிரித்தான்.

என் கூட வேலை பார்க்கிறவர் தெரியாமல் பேசி விட்டார் மிஸ்டர் ஜேம்ஸ். ஐ யாம் ஸாரி..."

"இதைச் சொல்லத்தான் இங்கே கூப்பிட்டீர்களா?"

"உம்... தெரியாம இந்த மாதிரி நடந்து கொண்டார். ஐ பீல் ஸாரி..."

"அதனாலென்ன? அவர் மனத்தில் தோன்றியதை, உருவான எண்ணத்தை மறைக்காமல் கேட்டு விட்டார். அப்படிக் கேட்டது நிஜமான செயல். நான் அதை ரசித்தேன் — கொஞ்சம் காயத்தை அது மனசில் ஏற்படுத்தினாலும்."

அது உருவானது இல்லை. உருவாக்கப் பட்டது."

ஜேம்ஸ் கொஞ்ச நேரம் மௌனமாய், கண்ணை மூடிக் கொண்டு உட்கார்ந்திருந்தான்.

"அவர்களை மன்னித்து விடுங்கள் மிஸ்டர் ஜேம்ஸ். ப்ளீஸ்...

"மன்னிப்பு என்பது தவறு செய்தால் மட்டுமே தாரிணி."

"அவர்கள் தவறு செய்யவில்லையா?"

"இல்லை. அது அறியாமை."

ஜேம்ஸ் எழுந்தான்.

"கிளம்பலாமா மிஸ். தாரிணி...? உங்களுடன் பேசியது ஓர் இனிய அனுபவம். நீங்கள் எனக்காகக் கவலைப்பட்டீர்கள் என்கிற அன்பு அந்தக் காயங்களை ஆற வைத்து விட்டது... தாங்க்யூ."

"நன்றி சொல்லாதீர்கள்."

"ஏன்?"

"முதன் முதலாக நீங்கள் ஜி.எம்.மின் அறையினுள் நுழைந்த போது சொன்ன நன்றி சந்தோஷப்படுத்தியது. காரணம் — அப்போது நீங்கள் அந்நியர். இப்போது —

ஒரு நல்ல நண்பர். அன்புக்காக நன்றி சொல்வது தவறு.''

அவன் சிலிர்த்துப் போய்ச் சந்தோஷப் பட்டது அவன் கண்ணில் மின்னிய நிஜ வெளிச்சத்தில் தெரிந்தது. சட்டென்று தன் பையைத் திறந்து ஒரு காஸெட்டை எடுத்து நீட்டினான்.

''வேணாம். என்னிடம் காசு கிடையாது''

''இது வியாபாரம் இல்லை மிஸ். தாரிணி. அன்பு.''

மறுக்கமுடியாமல் வாங்கிக்கொண்டாள்.

அவனை அனுப்பி விட்டு 'சீட்'டுக்கு வந்த போது ஸ்டீபன் இளக்காரமாய்ச் சிரித்தான்.

''எங்கூட கான்டீனுக்கு வர மாட்டீங்க.. அவன் கூடப் போக முடியுமோ?''

பதில் சொல்லாமல் ஜேம்ஸ் கொடுத்த காஸெட்டைத் தன் பைக்குள் வைத்தாள்.

''அதானே பார்த்தேன்...காப்பி வாங்கிக் கொடுத்து ஒசி காஸெட்டா?''

''ஸ்டீபன்...!''

''கோபம் மட்டும் பொத்துட்டு வருது. அவனோட போகத் தெரியுது. அவன் பேசின இங்லீஷ் மயக்கிடுச்சா. என்னோட ஒரு நாள் வர முடியாதா?''

''முடியாது.''

''ஏன்?''

''என் இஷ்டம்.''

''அவனோட மட்டும் போனதுக்கு என்ன காரணம்?''

ஸ்டீபன் கோபமாய்க் கேட்டான். தாரிணியின் மனத்தில் ஜேம்ஸ் தோன்றினான்.

''இது வியாபாரம் இல்லை மிஸ். தாரிணி. அன்பு.''

ஸ்டீபன் இன்னமும் பதிலுக்காகக் காத்திருந்தான். தெரிந்தால் நாளையிலிருந்து அப்படி நடந்து கொண்டு, தாரிணியைத் தன் பக்கம் இழுக்கலாம் என்கிற ஆசை...

மௌனமாய் இருந்து விடலாம். ஆனால் இதுதான் சமயம் — அஹிம்சை வார்த்தைகளால் சாட்டையடி கொடுப்பதற்கு.

தாரிணி உள்ளிழுத்துப் பெருமூச்சு விட்டாள். அத்தனை மனச் சூடும் வெளியே பரவினாற் போலொரு விடுதலை சுகம்.

''காரணம் சொல்லுங்க தாரிணி? எந்த விதத்துல அவன் என்னை விட உசத்தி.''

''அவர் நிஜமான மனுஷர் ஸ்டீபன். அவர் நிஜம். அவர் மனசு நிஜம். அவர்ட்ட உள்ள எல்லாம் நிஜம். காரணம் புரியுதா?''

அந்தப் பதிலில் ஜேம்ஸைக் காயப்படுத்தியவனைக் காயப்படுத்திய திருப்தி எழுந்தது. வேலை போய் விடுமே என்கிற பயத்தில் அடக்கி வைத்திருந்த உணர்ச்சிகள் வெளிப்பட்டன... ''அவனை நிஜம் என்று சொன்னேன் என்றால் நீ பொய் என்பதை மறைமுகமாய் உணர்த்தியிருக்கிறேன்'' என்று வெளிப்படுத்தியாயிற்று. முதன் முதலாய் ஒரு போலிக்காரனிடம் நிஜத்தை சொல்லியாகி விட்டது என்ற திருப்தி இருந்தது.



## நீங்கள் கேட்டவை — தராசு

* டி. கே. சுப்பிரமணியன், திருப்பரங் குன்றம்.

? இந்திய கிரிக்கெட்டில் மீண்டும் ஒரு நல்ல லெக் ஸ்பின்னர் தோன்றியுள்ளது பற்றி?

! ஹிர்வானியின் சாகசத்தை நாம் குறைத்து மதிப்பிட முடியாது என்றாலும், 'அவருக்கு உதவுவதற்காகவே சென்னை பிட்ச் தயாரிக்கப்பட்டிருந்தது' என்ற குற்றச் சாட்டைப் பொய்யாக்கும் விதமாக வேறு இடங்களிலும் அவர் தமது ஆற்றலை நிரூபித் தாக வேண்டிய நிர்ப்பந்தத்தில் இருக்கிறார்.

* முதல்வராகி...?



* பா. புஷ்பமுருகேச ராஜன், சின்னமனூர்.

? அ. தி. மு. க. கோஷ்டி பூசல், பதவிச் சண்டை இவற்றைத் தீர்த்து வைக்க யாரும் சமரச முயற்சியில் ஈடுபட முன்வராதது ஏன்?

! சட்டை — வேஷ்டி கிழியும், ஆஸ்பத்திரியில் ஆறு மாதம் காயங்கள் ஆறப் படுத்திருக்க நேரிடும் என்ற அச்சமாக இருக்கலாம்.

* மு. கண்ணன், திருச்சி.

? அறிஞர் அண்ணாவுக்கும் புரட்சித் தலைவர் எம். ஜி. ஆருக்கும் என்ன ஒற்றுமை, வேற்றுமை?

! இருவரும் உட்கட்சி ஜனநாயகத்தில் கவனம் செலுத்தினார்கள் என்பது ஒற்றுமை. ஒருவர் அதை வளர்த்தார்; இன்னொருவர் வதைத்தார் என்பது வித்தியாசம்!

* எல். மாறன், மேல்பட்டி.

? பி. காம்., தேர்வு எழுதிய மாணவர் ஒருவருக்குச் சென்னைப் பல்கலைக் கழகம் எம். காம்., பட்டம் வழங்கியிருப்பதைக் கவனித்தீரா?



* ஜம்பம் சாயவில்லை...

! சில சமயங்களில் நமது பல்கலைக் கழகங்கள் தகுதியே இல்லாதவர்களுக்கு டாக்டர் பட்டங்கள் வழங்குகின்றனவே; அதை விட இது எவ்வளவோ மேல்!

* மீனாக்ஷி பட்டாபிராமன், சென்னை — 64.

? என்ன, நீங்கள் கேட்டவை பகுதியில் ஒரே அரசியல் நெடி? (சுவை குன்றவில்லை!)

! சுவை குன்றினாலும் பாதகமில்லை; நமது எம். எல். ஏக்களும் இதர தலைவர்களும் பண்பாட்டுடன் நடந்து கொண்டால் நல்லது. ஆனால் சட்டசபையையே குஸ்திக் களமா, சடுகுடு ஆட்டமா, குழாயடிச் சண்டையா என்று புரியாத அளவுக்கு அவர்கள் மாற்றிக் கொண்டிருக்கும் போது தராசு பதில்கள் பகுதியிலும் அரசியல் மசாலா நெடி பரவத்தானே செய்யும்!

* வித்யா மன்னன், திருச்சி.

? பாரதப் பிரதமரிடம் நம் முதல்வரின்

# ஜெயலலிதா முதல்வராகி,

ஜம்பம் பலிக்காது போலிருக்கே?

! மாற்றுக் கோஷ்டியின் ஜம்பமும் பலிக்கவில்லையே! ஒன்றுபட்ட அ. தி. மு. க. வுக்குத் தான் ஆதரவு என்று ஒரு போடு போட்டார் பாருங்கள்! இவர்களை ஒன்று படுத்த இனி லேட்டஸ்ட் பாரத ரத்ன உயிர் பெற்றுத் திரும்பி வந்தாலும் முடியாது என்பதாலும் அடுத்த பெரும்பான்மைக் கட்சியான காங்கிரஸுக்குள்ளேயே ஆயிரம் உட்பூசல் இருப்பதாலும் ஜனாதிபதி ஆட்சி கொண்டு வந்து கூடிய சீக்கிரம் தேர்தலுக்கு வழிவகுப்பதே நல்லது.

* க. பொன்ராஜ், புகளூர்.

? மசாஜ் நிலையங்களுக்கு அமைச்சர்கள் ஏன் திடீர் விஜயம் செய்வதில்லை?

! சட்டசபையில் கிடைக்கும் மசாஜே போதும் என்பதால் இருக்கலாம்!

* டி. மகேஸ்வரன், வீராக்கியம்.

? வீரப்பன் ஜானகி அம்மையாரையும்

# பெண்களையே அமைச்சராக்கினால்?

நெடுஞ்செழியன் ஜெயலலிதாவையும் நம்பி இருப்பதற்கு என்ன காரணம்?

! இரண்டு கோஷ்டிகளுமே தில்லி தங்களைக் கைவிடாது என்று நம்பி (மோசம் போனது) யதுதான் காரணம்!

* எஸ். ராஜேஷ், ஸ்ரீரங்கம்.

? தேர்தலுக்குப் பிறகு ஜெயலலிதா முதல்வர் ஆகி, தம் அமைச்சரவையில் பெண்களையே அமைச்சராக்கி ஊழல் இல்லாத நல்லாட்சியைத் தந்தால்...?

! அதென்ன ஸார், பெண்கள் என்றால் ஊழலே செய்ய மாட்டார்கள் என்று அவ்வளவு உறுதியா? அப்படியெல்லாம் நடந்து விட்டால் நான் மொட்டை அடித்துக் கொள்கிறேன்; நடக்கா விட்டால் நீர் மொட்டை போட்டுக் கொள்ளத் தயாரா?

* வி. செல்வராஜ், ஆரோவில். *

? படைக் குறைப்பு, அமைதி, சமாதானம் இவற்றில் நம்பிக்கை உடைய இந்திய அரசும், யுத்த உபகரணங்களைப் போட்டி போட்டுக் கொண்டு வாங்கி வருவது ஏன்?

! நட்பும் படைக்குறைப்பும் இரு வழிப் பாதை. அமெரிக்க யுத்த தளவாடங்களைச் சலுகை முறையில் பெறுவதைப் பாகிஸ்தான் நிறுத்தினால்தான் நாமும் படைக்குறைப்புச் செய்ய முடியும். இல்லையெனில் தேசப் பாதுகாப்பில் தூங்கி விட்டவர்களாகி விடுவோம். பாகிஸ்தானுடன் நட்புறவை வளர்த்து, இருதரப்பிலும் படைக்குறைப்புக்கு வழி வகுப்பதே நல்லது. இதற்குத் தில்லியில் ராஜதந்திரம் இன்னும் சிறப்பாகச் செயல்பட வேண்டும். யுத்த தளவாடங்களுக்குச் செலவாகும் தொகை, அபிவிருத்திப் பணிகளில் செலவானால் நாட்டின் பொருளாதாரமும் விரைவாக முன்னேறும்.

* ஜி. சண்முககுமார், திருச்சி.

? 'எம். ஜி. ஆரின் மருத்துவச் செலவுக்காகப் பணம் வசூலிக்கப்பட்டது குறித்து,



• நட்பின் இழப்பு...



• நிருபிக்க வேண்டும்

மத்திய அரசு விசாரணைக் கமிஷன் அமைக்கட்டும்' என்கிறாரே ஜெயலலிதா?

! இந்தக் கேவலமான கோஷ்டிச் சண்டையிலும் ஒரு நன்மை விளைந்திருக்கிறது! எம். ஜி. ஆருக்குத் தெரிந்தோ, தெரியாமலோ பல கோடி மோசடி நடந்திருப்பது அம்பலமாகியிருக்கிறது!

* ரகுராம், சென்னை — 24.

? ஜனவரி 26 — பாரத ரத்னா குறித்து?

! கெட்டித் தயிரைக் கடைந்து விட்டார்கள். இனி அது நீர் மோராக அதிக காலம் ஆகாது.

* சாமா, சீர்காழி.

? அண்மைக்காலத்தில் தங்களின் மனத்தை வேதனைக்குள்ளாக்கிய விஷயம்?

! தமிழகத்தின் இன்றைய நிலையே வேதனை தருவதுதான் என்றாலும் தனிப்பட்ட முறையில் பாரதி பதிப்பகம் பழ. சிதம்பரத்தின் மறைவு எனக்கு ஓர் இனிய நட்பின் இழப்பு. பல காரணங்களுக்காக அடிக்கடி சண்டை போட்டுக் கொண்டாலும் விடாப்பிடியாக நட்பைக் காத்து வந்தவர்கள் நாங்கள்! ராஜாஜி, கல்கி, கருணாநிதி, சுஜாதா முதலியவர்களின் நூல்களை வெளியிட்டுப் பெருமை பெற்றவர். ஏராள இளம் எழுத்தாளர்களின் புத்தகங்களைப் பிரசுரித்து ஊக்குவித்தவர். வாழ்க்கையில் உயர்ந்து, சினிமாவில் புகுந்து, வீழ்ச்சி அடைந்தவர். ஆனாலும் மனம் சலியாமல் மீண்டும் பதிப்பகம் தொடங்கி, வெற்றி கண்டவர். நூலக ஆர்டரை நம்பாமல் இரண்டு பெரிய பைகளில் நூற்றுக்கணக்கான புத்தகங்களை அடுக்கிக் கொண்டு இரு கைகளிலும் தூக்க முடியாமல் தூக்கிக் கொண்டு ஊர் ஊராகச் சென்று விற்பனை செய்த அவருடைய உழைப்பாற்றலை அந்தத் துறையில் வேறு யாரிடமும் காண இயலாது.

* ரூ. 15 பரிசு பெறுபவர்:
வி. செல்வராஜ்,
எச். ஆர். ஸெண்டர்,
ஆரோவில் — 605 101.

தேவி பாரடைஸ் A/c

அபிராமி A/c

மகாராணி

3 காட்சிகள்



கமல் ஹாசன்

அளிக்கும்

ராஜ்கமலின்...

# சத்யா

சுரேஷ் கிருஷ்ணா

இளையராஜா

ELEGA

फिल्मोत्सव Filmotsav



திரைவிழாப் படக்கதை — 2

# எங்கப்பா ஊரு...



புருஷார்த்தம் (மலையாளம்):

இருபது நிமிடங்களில் அழகாகச் சொல்லி முடிக்கப்பட வேண்டிய அழுத்தமான சிறுகதையைக் கிட்டத்தட்ட இரண்டு மணி நேரங்களுக்குக் கொட்டாவிகளாக நீட்டி விட்டார் டைரக்டர் மோகனன். சம்பவங்களின் பற்றாக்குறைதான் ஆர்ட் பிலிமின் இலக்கணம் என்ற தப்பான நம்பிக்கையை உறுதிப்படுத்தும் சோம்பலான திரைக்கதை.

'அஸ்வத்தாமு' என்ற தம் முதல் படத்திற்கு அப்புறம் ஒன்பது வருட இடைவெளி கொடுத்து இந்தப் படத்தை எடுத்திருக்கும் மோகனன் சொல்கிறார்: "இந்தப் படம் உங்களுக்குப் பிடித்தால் எனக்கு சந்தோஷம். பிடிக்காவிடில், வருத்தமில்லை." இது எப்படி இருக்கு?

காருக்குள் அனல்காற்று வீசியது.

"வினீத்.. கண்ணாடியை ஏற்று!" — சுபத்ரா அதட்டினாள். அவனுடைய செயலுக்குக் காத்திருக்காமல் தானே எம்பிக் கார்க் கண்ணாடியை ஏற்றி விட்டாள். அவளுடைய குறிப்பறிந்து டிரைவர் ஏ.ஸி.யை அதிகப்படுத்தினான்.

வினீத் தன் ஏழு வயது உடம்பை இருக்கையின் மூலையில் ஒண்டிக் கொண்டான். ஆசைப்பட்ட காட்சிகளை 'க்ளிக்' செய்யாமலேயே தன் பாக்கெட் காமெராவை சீட்டில் எறிந்தான்.

"வினீத்.." சுபத்ரா அவனை நோக்கித் திரும்பி உட்கார்ந்தாள். "போகுமிடத்தில் நீ நல்ல பையனாக நடந்து கொள்ள வேண்டும். அம்மாவுக்கு நல்ல பெயர் வாங்கித் தர வேண்டும்... தெரிந்ததா?"

வினீத் 'சரி' என்று தலையை மட்டும் ஆட்டினான். காருக்கு வெளியே பார்க்க ஆரம்பித்தான். செம்மண் நிலங்களும், பச்சை வயல் சதுரங்களும், தென்னை உயரங்களும், பென்ஸ் காரின் வேகத்திற்கு ஏற்ப 'விஷ்க், விஷ்க்' என்று பின்னேறி மறைந்தன. தார்ச் சாலை முடிந்து மண்பாதையில் புழுதி கிளப்பிக் கொண்டு பென்ஸ் விரைந்தது.

'பலராமபுரம்' என்று எழுத்துக்கள் தேய்ந்து வழி சொன்ன பாதையில் மூன்று கி.மீ. பயணம் செய்து, 'கிருஷ்ணன் வீடா?' என்று எல்லோரும் அடையாளம் காட்டத் தயாராயிருந்த வீட்டின் முன், வண்டி நின்றது.

சின்னத் தோட்டம். தென்னை, தென்னை, தென்னைகளுக்கு நடுவே அந்த ஜமீன்



பாணிக் கட்டடம். வீட்டு வாசலிலேயே அத்தனை உறவினர்களும் வரவேற்கக் காத்திருந்தனர்.

''வா சுபத்ரா, வா வினீத்...''

வாண்டுகள் காரைச் சுற்றிச் சுற்றி வந்து முகர்ந்து பார்த்தன. வினீத்தை விட்டு விடாமல் சுபத்ரா தன்னோடு அணைத்துக் கொண்டு செயற்கையான சிரிப்பை உதடுகளில் சுமந்து வீட்டிற்குள் அடியெடுத்து வைத்தாள்.

வாசு பிறந்து வளர்ந்த வீடு! இந்தத் துருப் பிடித்த ஜன்னல் கம்பிகளிலும், இற்றுப் போன மரப்படிகளிலும், தோல் உரிந்த செங்கல் சுவர்களிலும் வாசுவுக்கு அப்படியென்ன பிரியம் இருந்தது? சென்னையின் அற்புத மாளிகையை அனுபவித்த உடம்புக்கு இங்கே என்ன சுகம் இருந்தது என்று வருடத்திற்கு ஒரு தரமாவது வந்து போய்க் கொண்டிருந்தான்? எனிவே, நானும் என் மகனும் இந்த வீட்டிற்குக் கடைசி கடைசியாக வந்திருக்கிறோம். காரியம் முடிந்து திரும்பிய பின் இந்தப் பக்கம் தப்பித்தவறிக் கூடக் காலடி வைக்கப் போவதில்லை.

சுபத்ரா தன் மைசூர் பட்டு கசங்காமல் தனக்காக ஒதுக்கப்பட்டிருந்த அறைக்கு நடந்தாள். வினீத் அம்மாவிடமிருந்து திமிற முடியாமல் கூடவே நடந்தான்.

''அம்மா, இது யார் வீடும்மா?''

''உங்க அப்பா வீடுடா குழந்தே..'' என்று பாட்டியிடமிருந்து பதில் வந்தது. வெள்ளைப் புடைவை கட்டி, நெற்றியில் விபூதிக் கீற்றுடன், கண்களில் தயாரான ஜலத்துடன் பாட்டி. ''வாசு ஓடியாடி வளர்ந்ததெல்லாம் இங்கேதான்.. இப்போ அவன் போனப்புறமும் எங்களையெல்லாம் பார்க்கணும்னு வந்தியே... என் ராஜா...'' பாட்டியின் எலும்புக் கை வினீத்தை வருடிக் கொடுக்க, சுபத்ரா ஆரவாரமில்லாமல் விலக்கிக் கொண்டு தன்னறைக்குள் நுழைந்தாள்.

கூடம் பெருக்கித் துடைக்கப்பட்டு, கோலங்கள் போட்டு, நெய் தீபங்கள் வைக்கப்பட்டிருந்தது.

வினீத் புது டிராயர், சட்டை அணிந்து, உணர்ச்சிகள் இல்லாத முகத்துடன் பாட்டியின் பிடியில் ஒண்டிக் கொண்டிருந்தான். மரப்பலகையில் வெண் சோழிகள் குவிந்திருந்தன.

கூடத்தின் இன்னொரு பகுதியில் ஜன்னல் வெளிச்சம் தரையை மெழுகிய இடத்தில் வேணு உட்கார்ந்திருந்தார். சுபத்ரா சாத்திய கதவில் நலுங்காமல் சாய்ந்து அமர்ந்திருந்தாள். சோழிக் குவியலுக்குப் பின்னே, திறந்த மார்பில் சந்தனம் பூசி, நெற்றியில் குங்குமம் அப்பிய மலையாளப் பூசாரி.

வேணு தொண்டையைக் கனைத்தார்.

''என் தம்பி வாசு போன மாதம் மெட்ராஸில் தூக்கத்தில் செத்துப் போய் விட்டான். அவனுடைய பையன் வினீத் — பெண்டாட்டி சுபத்ரா...'' என்று அறிமுகம் முடித்தார். ''சுபத்ராவுக்கு ராத்திரி நேரங்களில் தூக்கம் இல்லையாம்.. செத்துப் போன வாசு அவள் பின்னாலேயே உலாத்திக் கொண்டிருப்பது போல் ஒரு பிரமை... அதற்காகத்தான் இவ்வளவு தூரம் வந்திருக்கிறாள்..''

சுபத்ரா 'ஆம்' என்பது போல் தலையை ஆட்டினாள்.

பூசாரி கண்களை மூடி 'மண மண' என்று ஏதோ ஒப்பித்து, ஒரு கை நிறைய சோழியை அள்ளினார். அதை ஒருபுறத்தில் போட்டு நான்கு நான்காக எண்ண ஆரம்பித்தார்.

சுபத்ரா துடிக்கும் இதயத்தோடு அவரையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

பூசாரி சில கணக்குகள் போட்டு, சுபத்ராவை நிமிர்ந்து ஆழமாகப் பார்த்தார்.

''வாசு இயற்கையாகச் சாகவில்லை'' என்றார்.

''என்னது!'' வேணுவும், பாட்டியும் ஒரே சமயத்தில் அதிர்ச்சிக்குரல் கொடுத்தார்கள்.

''வாசு அவனுடைய ஆயுள் முடிவதற்குள்ளேயே செத்து விட்டான். அதனால்தான் அவன் ஆத்மா அமைதியில்லாமல் சுற்றிக் கொண்டிருக்கிறது...'' பூசாரி சோழிகளை உற்றுப் பார்க்கத் தொடங்கினார்.

சுபத்ரா வியர்த்தாள். புடைவையும் ரவிக்கையும் உடம்போடு ஒட்டிக் கொண்டன. வேலைக்காரப் பெண் உடனே விசிறி எடுத்து விசிறி விட ஆரம்பித்தாள். நடப்பது சரியாக விளங்காமல் வினீத் பாட்டியின் கைகளில் நெளிந்தான்.

''வினீத்... நீ போ... போய் விளையாடிக் கொண்டிரு..'' என்று வேணு வேலைக்காரப் பெண்ணுக்குச் சைகை செய்ய, அவள் வினீத்தை எழுப்பிக் கூட்டிக் கொண்டு போனாள்.

''வாசு மாரடைத்துச் செத்துப் போனார். சென்னையின் அத்தனை பெரிய டாக்டர்களாலும் காப்பாற்ற முடியவில்லை...'' — சுபத்ரா மெலிந்த குரலில் சொன்னாள். ''ஆனாலும் சின்ன வயதில் இறந்து போனதால் அமைதியில்லாமல்...''

''வாசு இயற்கையாகச் சாகவில்லை!'' — பூசாரியின் குரல் அவளை வெட்டியது. ''அவனுடைய சாவிற்கு என்ன காரணம் என்று கூட என்னால் கண்டுபிடித்துச் சொல்ல முடியும்'' என்று சோழிகளை அவர் மறுபடியும் குலுக்க ஆரம்பித்தார்.

''நோ!'', சுபத்ரா அலறினாள். உதடுகள் அழுகையில் துடித்தன. ''நோ, நோ, நோ!''

வேணு பதறி எழுந்தார். ''சுபத்ரா... காம் டவுன்..

சுபத்ரா புடைவைத் தலைப்பால் முகத்தை மூடிக் கொண்டு உள்ளே ஓடினாள்.

வேணு பூசாரியைப் பார்த்துத் திரும்பினார். ''புருஷன் செத்துப் போன அதிர்ச்சியிலிருந்து அவள் இன்னும் முழுவதும் மீளவில்லை.. அதனால் அவனைப் பற்றியும், அவன் சாவைப் பற்றியும் அதிகம் பேசாதீர்கள்... இன்றைக்கு இது போதும்... நாளைக்கு வாருங்கள்.''

சபை கலைந்தது.

**வி**னீத் மரப்படிகளில் தூசு பறக்க, வேலைக்காரப் பெண்ணின் பின்னே ஏறினான். மாடியில் இருந்த ரூமைத் திறந்ததும், கரப்பான்கள் வெளிச்சத்தைக் கண்டு பயந்து ஓடின. சிலந்திகள் காற்று வீச்சால் ஊஞ்சலாடின.

"இதுதான் உன் அப்பாவின் ரூம்."

வினீத் கள்ளிப் பெட்டியை நகர்த்தி அதன் மீது ஏறி, சுவரில் மாட்டியிருந்த குரூப் போட்டோவை எடுத்தான். காலேஜ் முடிந்து மாணவர்கள் நெருக்கமாக நின்றிருந்த அந்த போட்டோவில் அப்பாவைத் தேடினான்.

இதோ, இளமையாயிருந்த போதும் அந்தக் குண்டு குண்டுக் கண்கள் காட்டிக் கொடுக்கிறதே... கண்ணாடி தூசியைச் சட்டை நுனியால் துடைத்தான்.

"டாடி..." என்றான். போட்டோவுக்கு முத்தம் கொடுத்தான்.

அப்பா இனிமேல் திரும்பி வரவே மாட்டாரா? அவன் கண்களில் சோகம். தொண்டையில் துக்கம். நெஞ்சில் ஏக்கம்.

திடீரென்று கீழேயிருந்து குரல்கள் சீறி வந்தன.

முக்கியமாய் அம்மாவின் குரல்.

வினீத் தடதடவென்று படிகளில் இறங்கினான்.

**சு**பத்ரா கட்டிலில் துள்ளிக் குதித்தாள். "ப்ளீஸ் லீவ் மீ, ப்ளீஸ் லீவ் மீ" என்று தலையணையை ஓங்கி ஓங்கிக் குத்தினாள். புரட்டிப் போட்ட மீன் போல் குப்புறப்படுத்து அழுதாள்.

"சுபத்ரா.. காம் டவுன்.. டாக்டரைக் கூட்டி வரவா?" வேணு அறை வாசலில் நின்று பதறிக் கொண்டிருந்தார்.

வினீத் சற்று பயத்துடன், சற்று அழுகையுடன் அம்மாவைப் பார்த்துக் கொண்டு நின்றான். மெட்ராஸிலும் அம்மா இப்படித்தான் அடிக்கடி தூக்கத்தில் எழுந்து கத்துவாள். அம்மாவுக்கு என்ன ஆகி விட்டது?

"வேணு..." பாட்டி ரகசியமாகக் கூப்பிட்டாள். "வாசுதான் அவளைத் துரத்திட்டிருக்கான்.. நாளைக்குப் பூசாரியைக் கூட்டிட்டு வந்துடு."

**ம**றுநாள் கூடத்தில் மறுபடியும் தீபங்கள் ஏற்றி, சோழிகள் குலுக்கி, பூசாரி விபூதியை ஊதினார்.

"பரிகாரம் பண்ண வேண்டும்.. செலவாகுமே, பரவாயில்லையா?"

"செலவைப் பற்றி நீங்கள் ஏன் கவலைப் படுகிறீர்கள்? வாசுவின் கோடி ரூபாய் சொத்தும் சுபத்ராவுக்குத் தானே விட்டுப் போயிருக்கிறான்? என்ன செய்ய வேண்டும், சொல்லுங்கள்.."

"நூற்றியெட்டு சுமங்கலிகளுக்குப் பட்டுப் புடவை, வெற்றிலை, மஞ்சள். நூற்றியெட்டு ஏழைகளுக்கு அன்ன தானம்... கோயிலில் நூற்றியெட்டு அபிஷேகங்களுக்கான கட்டளை செலவு. அப்







"லஞ்ச ஒழிப்பு அதிகாரிங்ககிட்டே எங்க மானேஜர் மாட்டிக்கிட்டார்!"

"அடடே! அப்புறம்?"

"எங்க ஆபிஸ்லே மத்தவங்களைக் காட்டிக் கொடுக்காமே இருக்கிறதுக்காகத் தலா ஐயாயிரம் கறந்துட்டார்!"

— கொசவம்பட்டி அசோகு.

---

புறம் இங்கே ஒரு ஹோமம் நடத்தி, ஒரு மண் பானையில் வாசுவின் ஆவியை அடக்கி விடுவேன்... அதைத் தனுஷ்கோடியில் கொண்டு கடலில் போட வேண்டும்.."

"எல்லாவற்றையும் செய்து விடலாம்" என்றாள் சுபத்ரா நடுங்கும் குரலில்.

பதினைந்து நாட்கள். பலராமபுரம் கலைத்த தேன்கூடு போல சுறுசுறுப்பாக இயங்கியது. பூசாரியின் மேற்பார்வையில் ஒவ்வொன்றாகச் செயல்படுத்தப்பட்டது. சுபத்ராவிற்கு இந்த நாட்கள் நரகமாய்த் தோன்றின. வினீத்திற்குச் சுதந்திரமான, நவீனமான நாட்கள்.

அப்பா படித்த ஸ்கூல், அப்பா நீச்சலடித்த நதி, அப்பா ஏறிய மாமரங்கள், அப்பா விளையாடிய மைதானம், அப்பா புரண்டு எழுந்த தெருப்புழுதி...

வினீத் திருப்தி வராமல் மறுபடி மறுபடி பலராமபுரத்தில் சுழன்று வந்தான். பதினைந்தாம் நாள் அவனுடைய துணிமணிகள் பெட்டியில் திணிக்கப்பட்டு, அவன் காரில் திணிக்கப்பட்ட போது, அழுகையும், சோகமும், துக்கமும், ஏக்கமும் கார் நிறைய அடைத்துக் கொண்டன.

சுபத்ரா வேணுவிடம் ஒரு செக்கை நீட்டினாள்.

"ஏதோ பழைய நிலங்களை வாங்க வேண்டுமென்றீர்களே, வாங்கிக் கொள்ளுங்கள்.."

அவள் காரில் மகாராணி போல் ஏறி அமர்ந்ததை ஊர் முழுவதும் திறந்த வாயுடன் வேடிக்கை பார்த்தது.

மறுபடியும் கார்ப் பயணம். ஆனால் இது வேறு கார். டிரைவருக்குப் பதிலாக ஜெனரல் மேனேஜர் குப்தா. அவன் அருகில் கம்பெனியின் டைரக்டர் சுபத்ரா. பின் சீட்டில், அப்பாவின் 'ஆத்மா'வை அடக்கியிருக்கும் மண்பானையுடன் வினீத்.

கார் ராமேஸ்வரத்தை நோக்கிப் பயணப்பட்டுக் கொண்டிருந்தது.

"குப்தா... நினைத்தாலே நடுங்குகிறது.. நான் நரகத்திலிருந்து மீண்டு வந்து விட்டேன்..." — சுபத்ரா காற்றில் பறக்கும் தன் கூந்தலை முகத்திலிருந்து அழகாக ஒதுக்கினாள்.

"நீ ஏன் சுபத்ரா அந்த ரிமோட் வில்லேஜிற்குப் போனாய்?" — குப்தா தன் வசீகரமான சிரிப்பை உதடுகளில் தேக்கிக் கேட்டான்.

"வாசுவுக்குப் பிரியமான இடத்தில் தான் அவரை என்னிடமிருந்து விலக்க முடியும் என்று சொல்லி விட்டார்கள், குப்தா! நான் என்ன செய்யட்டும்? அதுவும் அந்தப் பூசாரி— சோழிகளைக் குலுக்கிப் போட்டு என்னவெல்லாம் கேட்டான் தெரியுமா?"

"அதையெல்லாம் மற, சுபத்ரா.. இப்போது எப்படி இருக்கிறது?"

"விடுதலையானவள் போல் உணர்கிறேன், குப்தா.." சுபத்ரா பின்புறம் திரும்பி, "வினீத்.. போரடித்தால் நீ தூங்கு.." என்றாள்.

வினீத் படுத்துக் கொண்டான். அரை நினைவாக அம்மாவின் சிரிப்பு கேட்டுக் கொண்டேயிருந்தது. அவ்வப்போது அந்த ஜெனரல் மானேஜர் குப்தாவின் சிரிப்பு அதனுடன் சேர்ந்து கொண்டது.

"ஊருக்கு ஒதுக்குப்புறமாக ஒரு ஃபிளாட் வாங்கி விடு குப்தா.. அங்கே நாம்... வினீத், நீ இன்னும் தூங்கவில்லை?"

வினீத் கட்டாயமாகக் கண்களை மூடிக் கொண்டான்.

ராமேஸ்வரம்.

அழுக்கான கடற்கரையில், திறந்த மார்பில் குளிர் நடுக்க, ஈர உடைகளுடன் வினீத் மந்திரங்களைத் திருப்பிச் சொன்னான். சாஸ்திரிகள் சிறுவனின் பயிற்சியில்லாத உதடுகளில் சம்ஸ்கிருதம் திண்டாடுவதை ரசித்துக் கொண்டிருந்தார்.

வினீத்தின் உதடுகளில் மந்திரம் இருந்தது. கவனம் கடலோர அலைகளில் இருந்தது.

அங்கே, இளங்காலை வெளிச்சத்தில் அம்மா சிரிப்புகளாக அதிர்ந்து கொண்டிருக்க, குப்தா தன் காமிராவைப் பல்வேறு திசைகளில் வைத்து 'க்ளிக்' செய்து கொண்டிருந்தான்.

வினீத்தின் மந்திரங்கள் தடுமாறின.

தூரத்தும் சொப்பனம் போல் மீண்டும் கார்ப் பயணம். வினீத் பின் சீட்டில் ஒடுங்கியிருந்தான்.

'வினீத், உனக்கு என்ன, உடம்பு சரியில்

லையா?' என்பன போன்ற கேள்விகளுக்கு மௌனம் சாதித்தான். தனுஷ்கோடியில் தான் மூழ்கடித்த அந்த மண்பானை கடலலைகளில் அலைக்கழிக்கப்பட்டதைக் கண்ணீருடன் நினைத்துப் பார்த்தான்.

''குப்தா, தாகமாயிருக்கிறது. அந்த இளநீர்க் கடையில் கொஞ்சம் நிறுத்தேன்...'', சுபத்ரா கொஞ்சலாகச் சொன்னாள்.

கார் சாலையோரம் ஒதுங்கியது.

''எனக்கு வேண்டாம்'' என்றான் வினீத்.

சுபத்ராவும், குப்தாவும் இறங்கிக் கொண்டதும், ஜன்னல் வழியே வெளியே பார்த்துக் கொண்டிருந்தவனின் கண்கள் விரிந்தன. எதிர்ப்புறம், அழுக்கான பஸ் ஒன்று நின்றிருந்தது.

'பலராமபுரம்' போகும் பஸ்.

வினீத் நிசப்தமாகக் காரிலிருந்து இறங்கினான். நகர ஆரம்பித்துவிட்ட பஸ்ஸில் ஓடிப் போய் ஏறிக் கொண்டான். கண்டக்டரிடம் காசை நீட்டினான்.

''எங்கே?''

''எங்கப்பா ஊருக்கு ஒரு டிக்கெட்'' என்றான் வினீத்.

கைரளி, ஸ்ரீ என்று இரட்டை தியேட்டர்கள். திட்டமிட்ட ஆறேழு வருடங்களுக்கு முன் அடிக்கல் நட்டு, அரசாங்க சேர்ப்பேறித்தனத்துடன் ஆறுபோட்டு, பிலிமோத்சவிற்காக இரவு பகலாகக் கண்விழித்து ஜனவரி 9 – ஆம் தேதி கேரள முதல்வர் ரிப்பன் வெட்டிய தியேட்டர்கள். இங்கேதான் பத்திரிகையாளர் மற்றும் சிறப்பு விருந்தினர்களுக்கான காட்சிகள் ஜனவரி 10 முதல்.

எல்லாமே 'கவர்ன்மெண்ட்'தானே என்று அலட்சியமாகக் கார்ப்பரேஷன் க்ளியரன்ஸ் வருவதற்கு முன்னமே தியேட்டரைத் திறந்துவிட்டது கூடத் தப்பில்லை. கார்ப்பரேஷன்காரர்கள் கேட்ட அளவிற்கு இலவச பாஸ் கொடுக்காதது தான் தப்பு. பார்த்தார்கள் கார்ப்பரேஷன் புள்ளிகள். போட்டார்கள் கோர்ட்டில் கேஸ்!

இது ஒருபுறமிருக்க, மின்சார வாரியத்திற்கும் கேட்ட அளவு பாஸ் கொடுக்கப்படவில்லை என்று கோபம். கத்திரிக்கோலை எடுத்துக் கொண்டார்கள். நினைத்தபோது, தியேட்டருக்கான மின்சார சப்ளையை 'கட்' என்று கட் பண்ணி விளையாடினார்கள். சினிமாக் காட்சிகள் திடீர் திடீர் என்று நின்று, ஜெனரேட்டர் தயவில் தொடர்ந்த கதை தனிக் கதை.

''யூனிபார்ம் போட்ட அத்தனை ஊழியருக்கும் பாஸ் கொடுத்தால், பத்திரிகைக்காரர்களை வெளியே வாசல் தெருவில்தான் நிறுத்த வேண்டும்'' என்று புலம்பினார், பிலிமோத்சவ் ஏற்பாடுகளைக் கவனித்து வந்த அதிகாரி. மாலை, இரவுக் காட்சிகளில் ஏராள பாஸ்கள் விநியோகமாகி, தியேட்டர் தரைகள், படிகள், சீட் கைப்பிடிகள், எங்கும் ஜனம் நிறைந்திருந்தது என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!

— ஜெயமன்மதன்



# N.S.K. பில்டர்ஸ்

## குறைந்த செலவில் வீடு கட்ட வேண்டுமா?

இதோ! என்.எஸ்.கே. பில்டர்ஸ் உங்களுக்காக அளித்திடும் மாபெரும் சலுகை

# புரட்சித்திட்டம் புதுமைத்திட்டம்

1800 சதுர அடி மனையில் குறைந்த பட்சம் 500 சதுர அடி கட்டிடப் பரப்புள்ள ஒரு தனி வீடு

விலை சதுர அடி ஒன்றுக்கு ரூ. 200/- (மனை உட்பட)

வங்கி ஊழியர்கள் மற்றும் மாதச் சம்பளம் பெறுவோர்களுக்கு ஒரு அரிய வாய்ப்பு!



# 10% மாபெரும் விழாக்கால சலுகை

ஒரு மனையின் விலை
ரூ. 20,000/- மட்டுமே

முதலில் செலுத்த வேண்டிய தொகை 50% மீதியை 90 நாட்களில் செலுத்தலாம்.

## வசதிகள்

1. எம்.எம்.டி.ஏ. (M.M.D.A.) அங்கீகாரம் பெற்றது. நெ. PPD 40 10/87
2. தெளிவான பத்திரங்கள்
3. மின்சார இரயில் மற்றும் பஸ் வசதிகள்
4. 10 அடி ஆழத்தில் சுவையுள்ள குடிநீர்
5. பள்ளிகள், ஆரம்ப சுகாதார நிலையங்கள் இவை அனைத்தும் அருகாமையில் உள்ளன.

**N.S.K.** நகர்,
திருநின்றவூர், சென்னை-602 024.

## சலுகைகள்

1. உடனடியாக வீடு கட்டுவதற்கு உண்மையில் விருப்பமுள்ளவர்களுக்கு 10% தள்ளுபடி வழங்கப்படும்.
2. முழுத் தொகையையும் செலுத்துவோருக்கு சிறப்புத் தள்ளுபடி அளிக்கப்படும்.
3. குரூப்பாக சேர்ந்து வாங்குவோர்களுக்கு சிறப்பு சலுகைகள் வழங்கப்படும்.

ஒரு சில மனைகளே உள்ளன. 15.1.88 முதல் 15.2.88 வரை இச்சலுகை அளிக்கப்படும். ஏமாற்றத்தை தவிர்க்க இன்றே தொடர்பு கொள்ளவும்.

மனைகளை இலவசமாகப் பார்வையிட
15.2.88 வரை தினசரி ஏற்பாடு செய்யப்படும்.

அணுக வேண்டிய முகவரி:



**N.S.K.** ரியல் எஸ்டேட்ஸ்

38-B, பர்கிட் ரோடு (முதல் மாடி), தி. நகர்,
சென்னை-600 017. தொலைபேசி எண்: 445252, 442106

EXELADS / NSK 006 / 87

# N.S.K. பில்டர்ஸ்

## அறிமுகப்படுத்துகிறோம்!



இந்தியாவிலேயே, முதல் முறையாக அனைத்து பிக்சட் டெபாஸிட்டுகளுக்கும் நில உத்திரவாதம் அளிக்கும் புரட்சிகரமான திட்டத்தை அறிமுகப்படுத்துகிறோம். உங்களின்சேமிப்பிற்கு முழுப் பாதுகாப்பு.

**R.B.I. யின் வரம்புக்கு உட்பட்டு இன்னும் சில டெபாஸிட்டுகளே ஏற்றுக் கொள்ளப்படும். 30-4-88 வரை வட்டி விகிதங்கள்.**

| 1 வருடம் | 2 வருடங்கள் | 3 வருடங்கள் | 5 வருடங்கள் |
|---|---|---|---|
| 17% | 18% | 19% | 21% |

மேலும், 5 ஆண்டு டெபாஸிட்டுகளுக்கு இலவச பரிசுகள் வழங்கப்படும்.

| டெபாஸிட் தொகை | இலவச பரிசு |
|---|---|
| ரூ. 5000 | குவார்ட்ஸ் சுவர்க் கடிகாரம் |
| ரூ. 10000 | மின் விசிறி |
| ரூ. 25000 | மிக்ஸி |
| ரூ. 50000 | வெட்கிரைண்டர் |
| ரூ. 100000 | 1 சவரன் தங்கக்காசு |











மேற்கண்ட வட்டி விகிதங்களும், இலவச பரிசுகளும் 30.4.88 வரை மட்டுமே.

மே 1 முதல் வட்டி விகிதங்கள் குறைக்கப்படுவதால், ஏப்ரல் 30 தேதிக்குள் டெபாஸிட்டை செலுத்தி பயனடையும். அரிய சந்தர்ப்பத்தை நழுவ விடாதீர்கள்.

மே 1 முதல் புதிய வட்டி விகிதங்கள்.

| 1 ஆண்டு | 2 ஆண்டுகள் | 3 ஆண்டுகள் | 5 ஆண்டுகள் |
|---|---|---|---|
| 16% | 17% | 18% | 20% |

ஆண்டு வட்டிக்கு 1% அதிகம்.

**NSK பில்டர்ஸ்**
38-B, [illegible] ( [illegible] ). தி. நகர், சென்னை-600 017.
தொலைபேசி எண்: 445252, 442106

**வளமான வாழ்க்கைக்கு N.S.K.**

EXELADS/NSK 004/88 (TAM)



# பதவியையும் பணத்தையும் உதைத்துத் தள்ளியவர்!

அட்டகாசமான மூக்கு, ஆஜானுபாகுவான உருவம் — நினைத்துப் பார்த்தால் கண் முன்னால் தெரிபவர் எல்லை காந்தி; முழுமையான காந்தியவாதியாகத் திகழ்ந்த கான் அப்துல் கஃபார் கான்!

"மதத்தின் வலிமையை வெறுமனே தலைகளை மட்டும் எண்ணி நான் மதிப்பிடுவதில்லை. ஒரு மனிதனுடைய வாழ்க்கையில் பிரதிபலிக்காத மதத்தினால் என்ன பிரயோஜனம்?" என்று கேட்டவர் அவர்! இஸ்லாம் என்பது 'அமால், யாகீன், மொஹப்பத்' (நேரிய நடத்தை, நம்பிக்கை, அன்பு) என்று பொருள் சொன்னார் பாத்ஷா கான்.

'அஹிம்ஸை விருது' என்ற பெயரில் அவருக்கு ஒரு லட்ச ரூபாய் வழங்க முயன்ற போது நினைத்துப் பார்க்கக் கூட முடியாத எளிமையோடு அதை மறுத்தார் பாத்ஷா கான். "நான் இறைவனின் சேவகன் மட்டும் தானே. பணத்தையும் பட்டத்தையும் வைத்துக் கொண்டு நான் என்ன செய்யப் போகிறேன்?" — என்று சொன்னார். கடவுளின்

சேவகன் என்ற அர்த்தத்தில் 'குதா — இ — கீத்மாட்கர்' என்ற அரசியல் கலப்பற்ற இயக்கத்தை பாத்ஷாகான் தொடங்கினார். ஆனால் செஞ்சட்டை அணிந்த அதன் உறுப்பினர்கள் பிரிட்டிஷாரர் கண்களுக்குக் கம்யூனிஸத் தீவிரவாதிகள் போல் தெரியவே, அதை ஒடுக்க முற்பட்டார்கள்.

பாபுஜியைப் போலவே மதவேற்றுமைகளுக்கு அப்பாற்பட்ட மனிதராகத் திகழ்ந்தார் பாத்ஷா கான். குஜராத் சிறையில் இருந்த போது, பகவத்கீதையைப் படித்ததுடன் பாபுஜியுடன் வார்தாவில் இருந்த போது தவறாமல் பிரார்த்தனைக் கூட்டங்களில் கலந்து கொண்டார் அவர்.

''ஹிந்துக்கள் விக்கிரஹ ஆராதனை செய்கிறார்கள் என்று குறைகூறி ஒதுக்க வேண்டாம். நாம் மட்டும் என்ன செய்கிறோம்? சமாதியை வழி படுவது எதைக் குறிக்கிறது?'' என்று கேட்டுச் சகோதரத்துவத்தை வலியுறுத்தினார். தீண்டாமை ஒழிப்பு, பெண் விடுதலை, மத சமத்துவம் எல்லாவற்றிலும் ஆர்வம் காட்டி, உன்னதமான ஏக இந்தியாவைக் காண விரும்பியவர் அவர்.

இன்று பதவிக்காக எப்படியெல்லாம் பூசலிட்டுக் கொள்கிறார்கள்; எவ்வாறெல்லாம் அதிகாரத்தை விலைக்கு வாங்கப் பார்க்கிறார்கள் என்பதைக் கண்ணுக்கு மெய்யாகக் கண்டு கொண்டிருக்கும் நமக்கு பாத்ஷா கானைப் புரிந்து கொள்வது கூடக் கஷ்டம் தான்! 1934 — ஆம் ஆண்டில் இந்திய தேசிய காங்கிரஸின் தலைவராக இருக்க வேண்டும் என்று அழைக்கப்பட்ட போது, வெகு சாதாரணமாக அந்தப் பதவியை மறுத்தார். ''நான் ஒரு போர் வீரனாகவே பிறந்தேன். அப்படியே கடைசி வரை வாழ்ந்து மடிவதையே விரும்புகிறேன்.''

இதை எழுத்துக்கு எழுத்து வாழ்ந்தே நிரூபித்தார் எல்லை காந்தி. படிப்பறியாத பெற்றோருக்குப் பிள்ளையாகப் பிறந்தார். அப்பா ஒரு கிராமத் தலையாரிதான். இருந்தாலும் '1857 கலவரத்தின்போது பெரும்சேவை புரிந்தார்' என்பதைக் கௌரவிக்கும் வகையில் ஆங்கிலேய அரசு அவருக்கு 'ஜாகீர்' வழங்கியது. அதே பிரிட்டிஷ் ராஜ்யத்தை வெறுத்து ஒதுக்கித் தேச பக்தராகிச் சிறைக்கும் சென்றார் அவர் — கான் ஸாஹிப் பேஹராம் கான். இத்தகைய ஒருவருக்கு மகனாகப் பிறந்தவர்,

''கடவுளுக்கு நாம் பணி செய்ய வேண்டிய அவசியமே இல்லை. நம்முடைய மக்களுக்கு நாம் சேவை செய்வதையே அவர் விரும்புகிறார்'' என்று கூறி, அதன்படி நடந்தும் காட்டியதில் வியப்பில்லை.

பாரதத்திலிருந்து பாகிஸ்தான் பிரிவதைச் சகித்துக் கொள்ள முடியாமல் மனம் வேதனைப்பட்டவர் பாத்ஷா கான். ''சுதந்திரப் போரில் நாங்கள், பக்தூன்கள், உங்களோடு தோளோடு தோள் நின்று மிகப் பெரும் தியாகங்களைச் செய்தோம். கடைசியில் எங்களைக் கைவிட்டு விட்டீர்களே...'' என்று குமுறினார்.

தம்முடைய ஆயுட்காலத்தில் மூன்றில் ஒரு பங்கு சிறைக் கம்பிகளுக்குப் பின்னால் இருந்தவர் பாத்ஷா கான். அந்நிய ஆட்சியில் பதினைந்து ஆண்டுகளும் சுதந்திர பாகிஸ்தானில் பதினாறு ஆண்டுகளும் சிறையிலிருந்தார் அவர். சுதந்திர பக்தூனிஸ்தானுக்காகப் பாகிஸ்தானில் அவர் நடத்திய இயக்கத்துக்குச் சுதந்திர இந்தியா ஆதரவு தரவில்லை என்ற வருத்தம் அவருக்கு நிறையவே உண்டு.

''ஆத்மார்த்தமான முஸ்லிம் அவர். என்னுடனிருந்த ஓராண்டுக் காலம் முழுவதும் அவர் 'நமாஸ்' செய்யத் தவறியதில்லை. உடல்நலம் சீர்கெட்டிருந்த நேரம் தவிர, ரம்ஜான் நோன்பையும் தவறியதில்லை'' என்று பாபுஜி ஒரு முறை குறிப்பிட்டார்.

முகம்மதலி ஜின்னாவின் காலம் முதல், பாகிஸ்தான் ஆட்சியாளர்கள் பலரும் பாத்ஷா கானைக் 'கலகக்காரர்' என்றும் 'ஹிந்துக்களின் ஏஜெண்ட்' என்றும் பழி கூறிப் புறக்கணித்திருக்கிறார்கள்.

ஜூலை '77 இல் பதவியேற்ற ஜெனரல் ஜியாதான், முதன் முதலாக இந்தப் பக்தூன் தலைவரை ஒரு தேசபக்தர் என்று அங்கீகரித்துப் போற்றியவர்.

சுதந்திரப் போராட்டத்தின் போது போலீஸ் தடியடியில் பாத்ஷா கானின் ஒரு பக்கத்து நுரையீரல் சேதமடைந்தது. கடைசி வரை ஒரு பக்கத்து நுரையீரலுடனேயே அந்தச் சாதுவான சிவப்புச் சிங்கம் நூற்றாண்டு விழாவை எட்டிப் பிடிக்க முயன்று, இரு ஆண்டுகளில் தோற்றுப் போனது.

— சுப்ரபாலன்

நன்றி : ஹிந்துஸ்தான் டைம்ஸ்

அடுத்த இதழ்...

அட்டையில்

சத்யராஜ் — சிறப்புப் பேட்டி



தளபதி நிடமதி:

# ஜானகிக்கு ஒன்னு; ஜெயலலிதாவுக்கு ஒன்னு!



இடமதி: தலைவரே! நீங்க காந்தியை விடக் கூட ஒருபடி மேலே போயிட்டீங்க!

தலைவர்: ஹி... ஹி... அப்படியா சொல்றே. ரொம்ப சந்தோஷம்!

இடமதி: ஆமா, அவர் நூல் நூற்கத்தான் சொன்னார்; நீங்களோ, கயிறுவே திரிக்கிறீங்களே!

— சரஸ்வதி பஞ்சு, திருச்சி — 16.

இடமதி: ஆளுனர் குரானா அப்பாவியா இருக்கார்; நான் மட்டும் கவர்னரா இருந்திருந்தா பிரச்னையே இருந்திருக்காது...

தோழன்: அதெப்படி? என்ன செய்திருப்பீங்க?

இடமதி: புரட்சித் தலைவர் மாவட்டங்களைப் பிரிக்கலையா? அதுமாதிரி மாநிலத்தையும் இரண்டாப் பிரிச்சு, ஜானகிக்கு ஒண்ணு, ஜெயலலிதாவுக்கு ஒண்ணுன்னு கொடுத்திருப்பேன்!

— என். வாசுதேவன், மேல்குந்தை.

தொண்டன்: நீங்க உண்ணாவிரதம் இருக்கும்போது போட, பூமாலைக்குஏற்பாடு செய்துட்டேனுங்க!

இடமதி: போடா அசடு! மேடை ஏறிப் பேசறப்போதான் பூமாலை வழக்கமா போடறீங்களே, உண்ணாவிரதத்தின் போது வடை .மாலை போடப்படாது?

— வி. என். ராஜராஜன், கோணக்கரை.

அமைச்சர்: அறுநூறு ஆழ்குழாய்க் கிணறுகள் இறக்க காண்டராக்ட் வாங்கினவன், அந்தக் கோஷ்டியின் ஆதரவாளனாய்ப் போயிட்டான்! படுபாவி!

இடமதி: உடனே காண்ட்ராக்டைக் 'கான்ஸல்' பண்ண வேண்டியதுதானே?

அமைச்சர்: என்ன காரணத்தைக் கூறி ரத்து செய்யறது?

இடமதி: இதென்ன பிரமாதம்? வறட்சி காரணமாச் செலவுகளைக் குறைக்கணும்னு மத்திய அரசு தாக்கீது அனுப்பியிருக்கிறதைச் சொன்னாப் போச்சு!

— மரு. ப. அறிவொளி, தஞ்சாவூர்.




சரஸ்வதி பஞ்சுவுக்கு வாழ்த்துக்கள்! இந்த இதழில் பிரசுரமாகும் அவருடைய துணுக்குக்குச் சன்மானம் இரட்டிப்பாகிறது! ரூ. 50/— பரிசு பெறுகிறார்.


பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.

அலுவலகம்: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: 4 3154 3, 4 34 157.

ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104 /—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 280/—; விமானத் தபால் ரூ. 680/—.

ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/—; வெளி நாடு: கப்பல் தபால் ரூ. 140/—; விமானத் தபால் ரூ. 340/—.

எழில்மிகு வண்ணங்கள்
எண்ணங்களின் நிழலுக்கு
அப்பாற்பட்டது.



இந்து கலர் பிலிம் IR 100
இந்து கலர் பேப்பர் FP 8







இந்துஸ்தான் போட்டோ பிலிம்
மானுபாக்சரிங் கம்பெனி லிமிடெட்
(ஒரு இந்திய அரசு நிறுவனம்)
இந்து நகர், உதகமண்டலம் 643 005
வர்த்தகத் தலைமையகம்:
சுப்ரமணியம் பில்டிங், துபாஷ்பேட்டை எண்: 2771
எண் 1, க்ளப் ஹௌஸ் சாலை, சென்னை 600 002

Sistas-HPF.822.87.TM

REGISTERED No. M...
Registered as a Newspaper ...


"ராதா...பொன்னிறமாய் பூக்குதே உன் அழகு
என்றும் நீதானடி எனக்கு—
வாழ்வின் விளக்கு!"

## படியுங்கள் இதோ...ஃபேர் அண்ட் லவ்லி எப்படி ராதாவுக்கு கவனிக்கத் தக்க சிகப்பழகை அளித்துவிட்டது... இயற்கைக்கே உரிய இதமான வழியில்.

விளக்கேற்றி வணங்குகிறள் ராதா...நெஞ்சிலே நன்றிக் கீதம்—பூரணமாய்த் தன் மீது பொன்மாரி பொழிந்ததற்கு, மேனிமலர நன்றி... நன்றி பொங்க வாழ்த்துகிறள் ஃபேர் அண்ட் லவ்லி க்ரீமை. எந்தப் பெண்ணும் கனவு காணும் பொன்வண்ணம்—சிகப்பழகு, அதனை மேனி மென்மையோடு இயல்பாகப் பூக்க வைத்த க்ரீம்—அதன் வண்ணஜாலமோ, துவக்கிய இரண்டே மாதங்களில்! நடந்ததை நம்பமுடியவில்லை. இக்காளிலோ, ராதாவின் காதுகளில் ராகமென ஒலிக்குது ராஜா 'அவர்' கொஞ்சும் ரகசியப் புகழுரை: ''பொன்னிறமாய் பூக்குதே உன் அழகு...!''

ராதாவைப் போலவே உங்களுக்கும், அந்த சிகப்பழகுக் கனவு பலித்திட முடியும் - ஃபேர் அண்ட் லவ்லி துணையோடு.



ஃபேர் அண்ட் லவ்லி துவங்குமுன்



ஃபேர் அண்ட் லவ்லி உபயோகிக்கும் நாட்களில்

**ஒரு முக்கிய விஞ்ஞானக் கண்டுபிடிப்பு...**
ஃபேர் அண்ட் லவ்லி, இயல்பாக உங்களை சிகப்பழகியாக்க இதிலுள்ள ஒப்பற்ற ஃபார்முலா—இரு முக்கிய வழிகளில் வேலை செய்கிறது. ஒன்று: சருமத்தின் அடியாழத்தில்



செயல்பட்டு, உடல் கறுக்கும் உள்வினையைத் தடுக்கிறது—வேறெந்த க்ரீமுக்கும் இது இயலாத சாதனை. மற்றொன்று: இதிலுள்ள இரட்டை ஸன்ஸ்க்ரீன் ஆற்றல், உடல் கறுக்க வைக்கும் சூரிய ஒளியை உட்புகாதபடி தடுத்து நிறம் காத்திடுகிறது. ஆகவே, 6 முதல் 8 வாரங்களில் புதிதாக மேலெழும்பும் கொழுந்துச் சருமப் படலங்களில் செவலையான சாயல் மிளிரும். அன்றாடம் இருமுறை ஃபேர் அண்ட் லவ்லி—நாள் தவறாமல் உபயோகித்து வந்தால், மென்மை கொஞ்சும் இயல்பான சிகப்பழகு உறுதியாக உமதாகிவிடும்.

**உபயோக முறை:**
கழுவிக் கொண்ட முகம், கழுத்து, கரங்கள்மீது ஃபேர் அண்ட் லவ்லி க்ரீமை பொட்டுப் பொட்டாக இட்டபின், மேல் நோக்கித் தேய்க்க வேண்டும் மெதுவாக. ஃபேர் அண்ட் லவ்லி செயல்படத் துவங்கும் போது சற்றே கூசும் உணர்வு ஏற்படுமானல் கவலை வேண்டாம், விரைவில் அது மறைந்துவிடும்.

**எளிதில் உள் உறிஞ்சப்படும்.**
குழைவு குணமோங்கி முன்னிலும் மென்மையாக வருகிறது ஃபேர் அண்ட் லவ்லி, ஒரேசீராய் பரவுகிறது சருமத்தில் மேலும் எளிதில் உறிஞ்சப்படுகிறது. உடலார உணருவீர் அந்த மாறுதலை...பிறகு காண்பீர் கண்கூடாக

ஃபேர் அண்ட் லவ்லி பற்றி மேலும் கேட்டறிய விரும்பினீரானல் எழுதுங்கள் இம் முகவரிக்கு: திருமதி கவிதா குமார், ஃபேர் அண்ட் லவ்லி அட்வைசர், பி.ஒ. பாக்ஸ் 758, பம்பாய் 400 021.

ஃபேர் அண்ட் லவ்லி
சிகப்பழகு க்ரீம்







## ...ண்காணும் சிகப்பழகை உமதாக்கும்... இயற்கைக்கே உரிய இதமான வழியி...

...NTAS FAL 54 2517 TM

இந்துஸ்தான் லீவரின் தரமான தயா...